உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

'எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி 24 | வெகுதான்யஸு ஐப்பசிமீ கஉ<br>1938ஸு அக்டோபர்மீ 17உ | பகு. 4 |

## கடவுள் வணக்கம்.

கழுதை குங்குமந்தான் சுமந்து எய்த்தால்
கைப்பர் பாழ்புகமற்று அதுபோலப்
பழுது நான் உழன்று உள்தடுமாறிப்
படுசுழித்தலைப் பட்டனன் எந்தாய்
அழுது நீ இருந்துஎன் செய்திமனனே!
அங்கணா அரனே எனமாட்டா
இழுதையேனுக்கு ஓர் உய்வகை அருளாய்
இடைமருது உறை எந்தைபிரானே.

---

நரைப்பு மூப்பொடு பிணிவரும் இன்னே
நன்றியில் வினையே துணிந்து எய்த்தேன்
அரைத்த மஞ்சளதாவதை யறிந்தேன்
அஞ்சினேன் நமனார் அவர்தம்மை
உரைப்பன் நான் உன்சேவடிசேர
உணரும் வாழ்க்கையை ஒன்றறியாத
இரைப்பனேனுக்கு ஓர் உய்வகை அருளாய்
இடைமருது உறை எந்தைபிரானே.

---

புல்நுனைப் பனிவெங் கதிர்கண்டால்
போலும் வாழ்க்கை பொருள்இலை நாளும்
என்னெனக்கு இனிஇற்றைக்கு நாளை
என்று இருந்து இடர்உற்றனன் எந்தாய்
முன்னமே உன்சேவடி சேரா
மூர்க்கனாகிக் கழிந்தன காலம்
இன்னம் என்றனக்கு உய்வகை அருளாய்

அதிகாரத்தைப் பின்பற்றிச் சென்று அதிலேயே மறைந்து போன காலத்தில் கண்ணுக்குத் தெரியாதவற்றின் ஒரு சக்தி யின் அழைப்பையும், ஆத்மாவின் உண்மையையும் காட்டி நம்மை அதிலிருந்து வெளியே கொண்டுவந்து விட்டவர்கள் அவர்களே. இத்தேசம் அழிவில்லாம லிருப்பதற்கு அவர்களே காரணபூதர் கள். இந்தக்காலத்தில் ஆத்மாவின் தத்துவத்தைப்பற்றி வற் புறுத்துவது அவசியம். இப்பொழுதுள்ள கெட்ட கனவிலிருந்து நம்மை விடுவிப்பதற்கு ஒரு அழியாத கொள்கை யிருக்கிறது; அதுதான் வெறுப்பிற்கும் பதிலாக அன்பு. அவ்விதம் கூறுபவர் கள் இப்பொழுதும் இருக்கிறார்கள்.

"முற்கால சரித்திரத்தைப் பாருங்கள். கிரேக்கர்கள் 800 வருஷ மிருந்தனர். ரோமராஜ்யம் 900 வருஷ மிருந்தது. பைஸான்டன் 1000 வருஷ மிருந்தது. தற்கால நாகரிகமோ அழிவு காலத்திற்கு வந்து விட்ட அறிகுறிகளைக் காட்டுகின்றன. இதற்கெல்லாம் அர்த்தமென்ன? இதுதான் அது. மத உண் மையை அடிப்படையாகக் கொண்ட நாகரிகம் நெடுங்காலம் நீடித் திருக்கிறது. சண்டை, ஆக்ரமிப்பு, அதன் வாதப்பிரதிவாதங் கள் ஆகியவற்றைக் கொண்டுள்ள நாகரிகங்கள் சொற்பகால மிருந்து மடிகின்றன. நாகரிகங்கள் இப்பொழுது அதிகரித்த ஓட்டத்துட னிருக்கின்றன. சாதுக்களே சதம். அவர்களே தான் உலகத்தை யடைவார்கள். உலகம் முடிவில் உலகமற்ற ஒரு பொருளுக்குச் சொந்தமாகிறது.........

"மதமானது மிக நன்றாக இருக்கிறது என்று நான் கூற விரும்பவில்லை.............மத மென்பது வாழ்க்கையை விட்டுத் தனித்ததல்ல. அழிவுற்ற கொள்கையை நாம் மறக்க முடியாது. குறிப்பிட்ட அரசியல் பொருளாதார நிலைமைக்கு அது உகந்த தல்ல என்று நாம் கூறவும் முடியாது. ஆயினும் நாம் உல கத்தை நன்கு திருத்தி யமைத்தால் அதனால் நீங்கள் மனத் திருப்தி யடைந்து சௌக்கியமாக இருக்கப் போகிறீர்களா? உலகிலுள்ள செல்வந்தர்கள் சௌக்கியமற்றவர்களாக இருக்க வில்லையா? மனிதனின் உண்மை மதிப்பான மகிழ்ச்சியை எவ் விதக் கணக்குகளும், நல்லபாதைகளும், தண்ணீர் வசதியும், சாக் கடைத் திட்டமும் அளிக்க முடியாது. ஆத்மாவை அறிவதற்கும் உண்மையை அறிவதற்கும் பசி, தாகம் எதையும் சகிக்கக் கூடிய வர்கள் இருக்கிறார்கள். அது ஒருவிதப் போக்கு என்று நாம் அதைத் தள்ளிவிட முடியாது.

"மனிதர்கள் வசிப்பதற்காக உலகத்தை நாம் உருவகப்படுத் துகையில், அவர்கள் சரியாக இருக்கிறார்களா என்று நாம் கவ

னிக்க வேண்டும். வாழ்க்கையின் அழிவற்ற உண்மைகளில் அவர்களுக்கு அன்பு ஏற்படுமாறு செய்ய வேண்டும்." ஸர். ராதாகிருஷ்ணன் கூறிய இவ்விஷயங்கள் நவநாகரிக மயக்கில் தலைகிறுக்கித் தடுமாறும் தற்கால மக்களுக்கு எவ்வளவு பொருத்தமானது என்பதை நாம் எடுத்துக் கூறவும் வேண்டுமோ!

மேலும், ஸர். ராதாகிருஷ்ணன் நாம் ஜீவிக்கும் காலத்தைப் பற்றிக் குறிப்பிட்டு விட்டு, "ஒருவனுக்குத் தனக்காகவுள்ளன வெல்லாம் நசுக்கப்பட்டு விட்டன. இத்தகைய காலத்தில் நாம் வசிக்கிறோம். ஒருவனுக்காக ஏற்பட்ட சுய அறிவே உயரிய மதம்; அதுவே உயரிய அரசியல் வாதம் என்பதே என் அபிப்பிராயம். சமூகம் ஒருவனை எப்படி சிறப்பாக்குகிறது? எப்படி அவன் மனதை அபிவிருத்தி செய்கிறது? எப்படி அவன் அறிவையும் நடத்தையையும் அபிவிருத்தி செய்கிறது என்பதைக் கொண்டே அச் சமூகம் பராமரிசிக்கப்படுகிறது. வாழ்க்கை ஒருவனிடம் ஆரம்பித்து அவனிடமே முடிகிறது. ஒருவனின் தீர்க்க தரிசனம் ஒன்றைச் சிருஷ்டிக்குந் திறமை, தனது தோழர்களின் அபிப்பியாயத்தில் கொண்டுள்ள அவனது பிடிப்பு முதலியவற்றை அவனிடமிருந்து பிரித்துவிட்டால் அது சம்பந்தப்பட்டவரை சரித்திரமே வேறாகிவிடும். அரசியலும் பொருளாதாரமும் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாவற்றையுங் கொடுக்கலாம். ஆனால் குறிப்பிட்ட ஒன்றிற்காக வாழ்க்கை நடத்துவதற்கு மற்றொரு சிறந்த குணமும் வேண்டும். ஆகையால் கல்விமான்கள் சைத்ரீகர்கள், வேதாந்திகள், ஞானிகள் எல்லோரும் தத்தம் கடமையைச் செய்யவேண்டியது அவசியம்" என்று வற்புறுத்திக் கூறுகிறார். இவற்றிலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால், எவ்வளவு விஞ்ஞான கலை வளர்ச்சியும், நவநாகரிக வளர்ச்சியும் ஏற்பட்டாலும் சமய உணர்ச்சி, கடவுள் நம்பிக்கை அவசியம்; ஆன்ம வளர்ச்சிக்கு, உண்மையான சமூக வளர்ச்சிக்கு, தேசிய முன்னேற்றத்துக்கு மத நம்பிக்கை இன்றியமையாதது என்பதேயாகும். எனவே தமிழ் மக்களாகிய நாமனைவரும் வெறும் போலி நவநாகரிக மயக்கிலேயே சென்றுவிடாமல், மத தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட நாகரிகத்தை மேற்கொண்டு வாழ முயல்வோமாக!

ஓம் தத் ஸத்.

---

# வெள்ளிவிழா அறிக்கை



"அடுத்த ஆண்டில் "ஆனந்த"னுக்கு 25 ஆண்டு பூர்த்தி என்பதற்கு அறிகுறியாக "வெள்ளி விழா" கொண்டாடத் தீர்மானித்திருக்கிறோம்" என்று இவ் வருஷ முதல் இதழில் வெளியிட்டிருந்தோ மல்லவா! இதைப் பார்த்ததும், வாசக நேயர்களில் பலர் வெள்ளிவிழா எப்போது நடக்கப் போகிறது? வருஷ ஆரம்பத்திலா? கடைசியிலா? என்று இன்னோரன்ன பல கேள்விகளைக் கடிதங்கள் வாயிலாக எழுதிக் கேட்டுக் கொண்டு வருகின்றனர். "ஆனந்தன்" வளர்ச்சியில் ஆர்வங் கொண்ட அன்பர் பலர் தங்களாலியன்ற நன்கொடைகளையும் அனுப்பி வருகின்றனர். இத்தகைய நண்பர்களுக்குப் பதிலளிக்கு முறையில் இவ் வறிக்கையை விடுக்கிறோம்.

ஆனந்தன் வெள்ளிவிழாவை மிகச் சிறப்பான முறையில் அடுத்த வருஷத் தொடக்கத்திலேயே கொண்டாடுவ தென்று தீர்மானித் திருக்கிறோம். அவ் விழாவை யொட்டி, "நினைவு மலர்" ஒன்றை வெளியிடவும் எண்ணி, அதற்கான ஏற்பாடுகளை இப்போதிருந்தே செய்துவருகிறோம். அந்நினைவு மலருக்குத் தமிழ்நாட்டில் புகழ்பெற்று விளங்கும் பல பேரறிஞர்களும், புலவர்களும் இனிய அரிய கட்டுரைகளை வரைவார்கள். தென்னாப்பிரிக்கா, மலேயா முதலிய தமிழ் வழங்கும் வெளிநாடுகளில் வசிக்கும் தமிழ் அறிஞர்களின் கட்டுரைகளும் இம்மலரில் இடம் பெறும். இவ்வெள்ளி விழாவை எவ்வளவு தூரம் சிறப்பாகக் கொண்டாட முடியுமோ அவ்வளவு தூரம் மிகச் சிறப்பாகக் கொண்டாட வேண்டுமென்று கேட்டுக்கொண்டு பல அன்பர்கள் தங்களால் இயன்றவளவு நன்கொடை அளித்துவந்திருக்கிறார்கள்.

இம்மாதம், சிலோன் கம்பளையைச் சேர்ந்த ஸ்ரீ எஸ். வேலுசாமி அவர்கள் ஒன்றரை ரூபாயை நன்கொடையாக அனுப்பியிருக்கிறார். அவருக்கு நமது மனப் பூர்வமான நன்றியைச் செலுத்துவதோடு அவர் எல்லா நலங்களும் பெற்று வாழவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கிறோம். இவ்வன்பர்களைப் பின்பற்றி மற்றும் பல வாசக நேயர்களும் தங்களாலான பொருளுதவியைப் புரிந்து நமது முயற்சியைச் சிறப்பிக்க வேண்டுகிறோம்.

# வானம்பாடியின் மரணம்

(மு. த. வேலாயுதம்.)

---

**பிரஞ்சுக் கவி பிரிசோ இயற்றியதன் மொழிபெயர்ப்பு.**

[பிரிசோ என்னும் பிரஞ்சுக்கவி ஒருநாள் சிறு காட்டின் வழியாய்ப் போகையில் துப்பாக்கிச் சத்தத்தைக் கேட்கிறார். தாம் 15 வயது சிறுவனாய் இருக்கையில், நன்றாய்ப் பாட்டுப் பாடிக்கொண்டிருந்த வானம்பாடியைச் சிறுபிள்ளை விளையாட்டாய்ச் சுட்டு வீழ்த்தியது அப்போது ஞாபகம் வருகிறது. அதைப்பற்றி எடுத்துக் கூறுகிறார்.]

வேட்டை யாடும் வேடன் ஒருவன்
காட்டில் கைத்துப் பாக்கிக் கொண்டே
வேட்டு ஒன்று விடுத்தனன். அஃதைக்
கேட்டேன், கேளீர்: முன்னொரு காலம்
எனக் குண்டான இகழ்மனச் சஞ்சலம்
நினைவில் தோன்றி நேர்மையில் வைத்தது
காலையி லோர்நாள் கடுகென வெழுந்தவ்
வேளையில் பக்ஷிகள் வேட்டை யாட
வனமது சென்றேன் வயதோ எனக்கு
நனிபதி னைந்தாம் ஆண்டு நடந்தது.
கல்விச் சாலை கவிதவிர் விடுமுறை
நல்லநாள் ஆகும். நலந்தரு புத்தகம்
எல்லாம் எறிந்து இதமுடன் மகிழ்ச்சி
எல்லை யின்றிக் கொண்டேன் எழிலுறும்
புதர்கள் நோக்கிப் போனேன் புட்கள்
அமிதமாய்க் கொணர ஆசை கொண்டேன்
சிவந்த கழுத்தும் திறந்த வாயும்
செவ்வழல் போன்ற தெளிவுறு விழியும்
கொண்ட வானம் பாடிக் குருவி
பண்ணில் தேன்கலந் தாற்போல் பாடி
எண்ணில் வண்ணப் பாக்கள் இசைத்தது.
நண்ணி நான்அதைச் சுட்டேன் அந்தோ!
பாட்டு நின்றது! பறவை வயிற்றில்
ஈட்டிபோல் 'ரவை' எறிடும் போது

கீச்செனக் கத்திக் கிர்ரெனச் சுழன்றது!
பேச்சடங் கிற்றே! பெட்புறும் பக்ஷியின்
கழுத்தி னின்று கண்டது ரத்தம்!
வழுவிலா இறகுகள் வீழ்ந்தன! அங்கே
ஒள்ளிய விழிகளை உடன்மூ டியது
மெல்லிய மரக்கிளை விட்டே மேன்மைப்
புள்ளும் புதரில் போய்த்தத் தளித்தது!
மரக்கிளை, புதர்கள், மட்டைகள் எல்லாம்
இரத்தக் கறையே எங்கணுங் கறையே;
பெருமையாய் வாழ்வதிற் பெரிதும் விரும்பிய
அருமைப்புள் என்கால் அடியி லிறந்தது.
ஆ! என்மனதில் அந்நாள் தொட்டே
உயரிய எண்ணம் உதிக்கப் பெற்றேன்.
உள்ளதை எடுத்துநான் உரைப்பதில் எவரும்
எள்ளிடும் விஷயம் ஏது மில்லை
அமுதப் பறவை ஆருயிர் என்றன்
மமதை பாவியக் களிப்பால் மறைந்தது!
பாடக னாகிய நான்பற் பலவாய்
அடிக்கடி மனதில் எண்ணி அழுதேன்

(முன்னிலைப் படுத்தி)

கண்ணிகர் சோதர! கவலை கொண்டு
வண்மைநின் உடலில் வடித்தேன் கண்ணீர்
நன்றாய் நான்தினம் எண்ணிப் பார்த்தேன்
கொன்றிடும் கொடிய வழக்க முணர்ந்தேன்
ஆயுதம் எடுப்பதை அகற்றி விட்டேன்
சிந்திய இரத்தம் சிறிதும் வீணில்லை
அந்நாள் தொட்டே அரும்புதர் நாடிப்
புட்களைத் தொலைக்கும் புன்மையைத் தவிர்த்தேன்
பெட்புறும் இரக்கம் கொள்வதைப் பெற்றேன்
இதனால் மனிதர் இடத்திலும் இரக்கம்
நிதமுங் கொள்ளும் நேர்மை யுற்றேன்
வன்மை சேர் இந்நூற் றாண்டில்
நன்னிலை வழங்கினாய் எனக்கு நீயே

# பாரதியாரின் குணாதிசயங்கள் *

:0:

(பு. சுப்ரமண்யம்.)

தமிழ்நாடு சீர்குலைந்து, சிறுமைக்குள்ளாகி, தமிழ்மக்கள் சுய அறிவையும் வீரஉணர்ச்சியையு மிழந்து, தமிழ்மொழி தன் இனிய சுவையும் வளர்ச்சியும் குன்றி, தமிழ்த்தாய் மானமிழந்து, அவஸ்தைப்பட்ட காலத்தில், இருள்போய் கதிரவன்தோன்றி பிரகாசிப்பதுபோல, கவிச்சக்ரவர்த்தி ஸ்ரீ சுப்ரமண்யபாரதியார் இத்தமிழுலகில் தோன்றி தேச விடுதலைக்கும், மக்களின் க்ஷேமத்திற்கும், தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும் அரிய பெரிய தொண்டுகள் செய்த ஓர் ஒப்பற்ற தேசபக்தர்; அரும் பெரும் தியாகி. அவருடைய நாடிகளிலும், நரம்புகளிலும், இருதயத்திலும் எப்போதும் தேசவிடுதலை ஆர்வம் குடிகொண்டிருந்தது. அவர் 'பெற்றதாயும், பிறந்த பொன்னாடும். நற்றவவானிலும் நனிசிறந்தவை' என்ற உணர்ச்சி பூண்டவர். பாரதியார் மக்களின் நலத்தை நாடி தன் உடல், பொருள் ஆவி முதலியவற்றையும் தியாகம் செய்தவர். அவர் சோம்பேரிகளாய் ஆண்மையிழந்து, வலிமை குன்றி, அடிமைத்தனத்தில் மூழ்கியிருந்த தமிழ் மக்களை வீரபுருஷர்களாகச் செய்து, தேச விடுதலையில் ஈடுபடும்படியான ஊக்கத்தையளித்தவர். தேசிய காங்கிரஸ் மஹாசபையில் அளவு கடந்த பற்றுடையவர். பாரதியார் ஓர் தீவிர பொது உடமை கக்ஷியைச்சேர்ந்தவர். அவர் 'தனியொருவனுக்கு உணவில்லையெனில் இஜ்ஜகத்தினையழித்திடுவோம்' என்ற தீவிர உணர்ச்சி பூண்டவர். அவருக்குத் தமிழ் நாட்டிலுள்ள அன்பு அளவிடமுடியாதது. "செந்தமிழ் நாடெனும் போதினிலே, பாரதமாதா, தேசவிடுதலை, நம் நாடு" என்ற பாக்களே அவருடைய தேசஅன்பை நன்கு விளக்கிக்காட்டும்.

பாரதியாருக்கு சங்கீதத்தில் ரொம்ப ஞானம் உண்டு. அவர் நன்கு பாடக்கூடியவர்; மேலும் நினைத்த நிமிடத்தில் பாட்டுகள் இயற்றும் சக்தியுடையவர். எந்த விஷயங்களையும் மிகவும் எளியதாகவும் இனிமையாகவுமுள்ள பாக்களில் புகுத்தி, பாமரர் முதல் படித்தவர்வரை வாசித்து இன்புறச்செய்யக்கூடிய ஓர் தெய்வீக சக்தி அவரிடம் இருந்தது. அவருடைய பாட்டுகளை ஒரு காவியப்பூஞ்சோலைக்கு ஒப்பிடலாம். பாரதியார் இலக்கியம் எழுதுவதிலும் சமர்த்தர். அவருடைய பாட்டுகளும், கவிதைகளும், கதைகளும் தேனொடுகலந்த பால் போல மிகவும் இனிய சுவை பொருந்தியன. ஒவ்வொரு பாக்களும் ஒவ்வொரு முந்திரிப்பருப்புருண்டை; நாம் அப்படியே அவைகளை விழுங்கவேண்டும். கம்பருக்குப் பின், தமிழ் வளர்ச்சி குன்றி, பெருமை குறைந்து வந்த நாட்களில் அதற்குப்புத்துயிர்

அளித்து, 'படிப்போர் கன்னங்கள் அமுதூற சிறந்த நடையில் எழுதி, எல்லோருக்கும் தமிழைப் படிக்கும்படியான ஆவலை யூட்டிய பாரதியார் 'கவிச்சக்ரவர்த்தி' என்றும் 'அமரகவி' என்னும் புகழ் பெற்றவர்.

பாரதியாருக்குக் குழந்தைகளிடத்தில் அதிகப்பற்று உண்டு; அவர்கள் தான் இந்நாட்டின் வரும் காலத்து மன்னர்கள் என்றமனப்பான்மை கொண் டவர். குழந்தைகள் சோம்பேரிகளாயில்லாமல் ஓடிவிளையாடி, சுறுசுறுப் பாய் எல்லாவிஷயங்களையும் கற்கவேண்டும் என்ற ஆசை அவருக்கு உண்டு. அவர், புதிய 'ஆத்தி சூடி' யில் காணும்படியான, புதிய புதிய கருத்துக் களை குழந்தைகளுக்கு ஊட்ட பாடுபட்டவர்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர் போன்ற மகான் களைப் போல பாரதியாரும் 'கடவுள் ஒருவரே உண்டு, பல்வேறு ஜாதிகள் பலவழிகளில் அவரைக் கூப்பிட்டும் தொழுதும் பணிசெய்து வருகிறார்கள். எல்லா வழியும் சமம்' என்ற கொள்கை கொண்டவர். பட்டினத்தடிகள், தாயுமானவர் போன்றவர்களைப் போலப் பாரதியாரும் ஒரு வேதாந்தி. அவருடைய வேதாந்தப் பாடல்களை மூடர்கள்கூட எளிதில் அறியக் கூடும்.

பாரதியார் ஓர் ஒப்பற்ற சமூகசீர்திருத்தவாதி; மேலும் ஓர் தீர்க்கதரிசி. நம்முன் காணப்படும் சில பழைய மூடக் கொள்கைகளை களையுடன் அறுத் தெறியவேண்டும் என்ற ஆவல் கொண்டவர். 'சமூகத்தில் ஏற்றத்தாழ்வு இருக்கக்கூடாது' என்ற மனப்பான்மை அவர் உள்ளம் பூராவும் பரவி யிருந்தது. நம்மக்களிடையே காணப்படும் ஹிந்து முஸ்லீம் சண்டையை யும், ஜாதிமதப் பேதச் சண்டைகளையும் அவர் வெறுத்து, 'எல்லோரும் இந்தியமக்கள், ஒன்றுபட்டு வாழவேண்டும்' என்ற கொள்கை பூண்டவர். தற்சமயம் நமது சமூகத்தில் "பறையர்கள்" என்று சில ஹிந்துக்களை ஒதுக்கிவைத்து, ஹிம்சிக்கும் வழக்கத்தை அவர் கண்டிக்கும் சுபாவமுடை யவர். தெருத்திண்ணைகளில் உட்கார்ந்துகொண்டு, வெட்டி வேதாந்தம் பேசி, 'உலகம் பொய்' என்றும், 'மாயை' என்றும் சொல்லிக்கொண்டு, சோம்பேரிகளாய் காரியம் ஒன்றும் செய்யாமலிருப்பவர்களை அவர் வையும் சுபாவமுடையவர்.

பாரதியாருக்கு பெண்களிடத்திலுள்ள அன்பை ஓர் தெய்வீக அன்பு என்றே கூறவேண்டும். பெண்களும் ஆண்கள் போலவே ஆறறிவு படைத்தவர்கள் என்றும், வீரம், சுதந்திரம், தயை போன்ற உணர்ச்சி உடையவர்கள் என்றும் மனப்பான்மை அவருக்கு உண்டு. தற்காலம் நமது சமூகம் அவர்களை வைத்திருக்கும் மோசமான நிலையைக் குறித்து வருந்தி அவர்களும் ஆண்களுக்குச் சரிநிகர்சமானமாக வாழ வேண்டும் என்ற பூரண ஆசை பூண்டவர். அவர் "பாரத பெண்மணிகளுக்கு 'கற்பு' ஓர் அணிகலன். அதை அவர்கள் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்" என்ற ஆவல் கொண்டவர். பாரதியார் 'புவிபேணி வளர்த்திடும் ஈசன் பெண் ணுக்கு ஞானத்தை வைத்தும், மண்ணுக்குள்ளே சில மூடர் நல்ல மாதரறிவைக் கெடுத்து, மாதர்களை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்தவேண்டும்' என்ற தீவிர நோக்கம் கொண்டவர். அவர் வரும் காலத்து சுயராஜ்ய இந்தியா வில் மாதர்கள் மூடக்கட்டுகளைத்தகர்த்து, சாத்திரம் கற்கவும், சாதம் படைக்கவும், வேதம் படிக்கவும் வேண்டும் என்ற விருப்பம் கொண்டவர்

"மருவிய காதல் மனையாளுந் தானும்
இருவரும் பூண்டுய்ப் பினல்லால்—ஒருவரால்
இல் வாழ்க்கை யெனுமியல்புடைய வான்சகடஞ்
செல்லாது தெற்றித்து நின்று"

என்ற உண்மையைக் கடைப்பிடித்து, ஆண்கள் பெண்களைப் படிக்கச் செய்து, அடுக்குள் பூனையாக வைத்திராமல் சுதந்திர உரிமை கொடுத்து, இந் நாட்டுக் காரியங்களில் இருவருமாக ஈடுபடவேண்டும் என்ற ஆசை கொண்டவர்.

பாரதியார் ஏழைகளிடத்தும் பிச்சைக்காரர்களிடத்தும் அளவுகடந்த அன்பு கொண்டவர்; தன் கையில் ஏது இருந்தாலும் தானம் செய்து விடும் சுபாவம் கொண்டவர்; இரக்கச் சிந்தனையுடையவர். எல்லோரிடத்திலும் அவர் அன்பாகவும், பிரியமாகவும், தணிவாகவும் பேசும் குணமுடையவர். பாரதியாரிடத்தில் ஒரு தீய பழக்கம் சில காலம் குடி கொண்டிருந்தது. எப்போதும் 'கஞ்சா' குடிப்பதில் அவருக்கு அதிகப்ரீதி. அவர் உயிருடன் தான் அந்தக் கொடிய பழக்கம் தொலைந்தது. அவர் சற்று முன் கோபி; ஆயின் உடனே சாந்தமடைந்து, அதை யுணர்ந்து, தன் கெட்ட குணத்தைக் குறித்து, வருத்தப்படும் சுபாவம் அவரிடத்தில் உண்டு. அவர் படிப்பில் அதிக பற்று உடையவர். அவர் அஞ்சா நெஞ்சு படைத்த வீரர்; எவ்வளவு கஷ்டங்கள் வந்திடினும் பொறுமையுடன் பொறுத்துக் கொள்ளும் சக்தியுடையவர். அவருக்குக் கடவுளிடத்தில் அபார பக்தி யுண்டு. அல்லும் பகலும் கடவுளையே தொழுது கொண்டிருக்க ஆசை கொண்டவர். இயற்கை அன்னையின் திருவிளையாடல்களைக் கண்குளிரக் கண்டு, இன்புறும் சுபாவம் உடையவர். யாருக்கும் அடங்கி நடக்கும் சுபாவ மில்லாதவர்; யதேச்சையாய் தன்னிஷ்டம் போல் காரியங்களைச் செய்யும் குணமுடையவர்.

இப்படிப்பட்ட சிறந்த குணங்களுடைய தமிழ் அன்னையின் அருந்தவப்புதல்வனான பாரதியாரை எக்காலத்திலும் மறவாமலிருக்க வேண்டியது, தமிழனாகப் பிறந்த ஒவ்வொருவனுடைய கடமையு மாகும். பாரதியாரின் புகழ் நீடூழி வாழ்க !!



# பழந் தமிழரது அயல்நாட்டு வாணிபம்

(K. V. சிவசுப்பிரமணியன் B. A.)

[தொகுதி 24 பகுதி 2.—93-ம் பக்கத் தொடர்ச்சி.]

இங்ஙனம் அலெக்சாந்தரால் கண்டு பிடிக்கப்பட்ட நகரம் கூடிய சீக்கிரத்தில் இந்தியாவுக்கும் ஐரோப்பிய நாடுகளுக்குமிடையே ஒரு பெரிய வியாபார ஸ்தலமாக மாறியது. அம்மன்னன் இறந்த சில ஆண்டுகளில் அலெக்சாண்ட்ரியா நகரமும் அழிந்தொழிந்தது. கி. மு. 285 முதல் 246-ம் ஆண்டுவரை ஆட்சி செலுத்திவந்த டாலெமி II. செங்கடல் வியாபாரத்தைப் பலப்படுத்தி, எகிப்திற்கு நன்மை பல செய்தான். பல முக்கியமான உள்நாட்டுத் தரை மார்க்கங்களை (Caravan routes) ஏற்படுத்தினன். செங்கடலுக்கும், நைல் நதிக்குமிடையே கிணறுகளும், தங்குமிடங்களும் கட்டப்பெற்றன. தரை மார்க்கம் முடிவடையும் இடங்களிலெல்லாம் துறைமுகங்கள் ஏற்படுத்தப் பெற்றன. இன்னின்ன துறைமுகங்களில் இன்னின்ன நாட்டுக் கப்பல்கள்தான் வியாபாரம் செய்யலாம் என்ற விதிகள் அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப் பெற்றன. எனவே, நாளடைவில் எகிப்து, தான் இழந்த சிறப்பை பையப்பைய மீண்டும்பெற்று விளங்க ஆரம்பித்தது. இரண்டாம் டாலமியின் முடிசூட்டு விழாவில் இந்தியப் பெண்டிரும், இந்திய வேட்டை நாய்களும், காகங்களும், இந்திய, வாசனைப் பொருள்களும் உபயோகிக்கப் பட்டன.

**கிரேக்க வணிகர்:**—கிறிஸ்து பிறந்த ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் இந்தியாவுக்கும் ஐரோப்பிய நாடுகளுக்குமிடையே நடைபெற்ற வியாபாரத்தில் கிரேக்கர்கள் தரகர்களாயிருந்து வியாபாரம் செய்து பலனடைந்தனர். இங்ஙனம் ஏற்பட்ட அகில தேச வியாபாரத்தின் பயனாய் அரிஸ்டோபேன்ஸ் சோபிக்ள்ஸ் முதலிய பெரும் புலவர்கள் தங்கள் நூல்களில் தமிழ் வழக்குச் சொற்களை ஏராளமாக உபயோகித் திருக்கின்றனர். கி. மு. 500க்கு முன் உரோமர்கள் டாம்பீக வாழ்க்கையை மேற்கொள்ளாமல் மிகவும் எளிய வாழ்க்கையையே நடத்தி வந்தமையின் வைடூரியம், லவங்கம், பட்டு முதலிய விலையுயர்ந்த பொருள்கள் (Luxuries) ரோம் தேசத்தினுள் நுழைந்தனவில்லை. கி. மு. 47-ம் ஆண்டில் ஜூலியஸ் ஸீஸர் அலெக்ஸாண்ட்ரியாவை கைப்பற்றிக் கொண்டபோதிலும் உரோம் தேசத்துக்குள் வந்திறங்கிய பண்டமாற்றுப் பொருள்கள் மிகக் குறைவு. ஆகையால் அப்பொழுது இந்தியாவிலிருந்து வந்த பொருள்களனைத்தும் கிரீஸுக்குப் போய்ச் சேர்ந்தனவெனக் கொள்ளல் வேண்டும்,

**உரோம ஏகாதிபத்யம்:**—கி. மு. 30-ல் அகஸ்தஸ் சக்ரவர்த்தி எகிப்தை வென்று, இந்தியாவி...

வாணிபம் நடைபெற பற்பல நூதன முறைகளைக் கையாண்டனன். கி. மு. 25ம் ஆண்டில் ஹார்மஸ—க்கும் இந்தியாவுக்கு மிடையே சுமார் 120 கப்பல்கள் வியாபார நிமித்தம் ஓடிக் கொண்டிருந்தன. அப்பொழுது தமிழ் நாட்டு மூவேந்தர்களால் அனுப்பப்பெற்ற தூதில்வல்ல ஒற்றர்கள் பலர் தன்னூட்டிற்கு வந்துபோனதாக அகஸ்தஸ் மன்னனே கூறியுள்ளான். அதனல் தமிழ் நாட்டிற்கும் உரோமாபுரிக்கு மிடையே ஏற்பட்ட வியாபாரம் நாளுக்கு நாள் பலமடைந்து வந்தது. ஆதிகாலந்தொட்டு உரோம ராச்சியம், இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்து கொள்ளும் பொருள்களுக்குச் சமமான மதிப்புள்ள பொருள்களை இந்தியாவிற்கு ஏற்றுமதி செய்ய முடியாத நிலைமையிலிருந்து வந்தது. ஆகவே, போதிய அளவுக்குப் பண்டமாற்று நிகழாமையின், உரோம நாயணங்கள் இந்தியாவிற்கு ஏராளமாய்ப் போய்ச் சேர்ந்தன. அங்ஙனம் அனுப்பப்பெற்ற நாணயங்கள் மீண்டும் உரோமாபுரிக்குத் திரும்பி வரத்தக்க சாதனங்களில்லாததால் ரோம ராச்சியம் தன் செல்வத்தை இழந்து மிகவும் வருந்தியது. எனவே இந்தியாவிற்கு வியாபாரத்தின் பொருட்டு அனுப்புவதற்கெனவே சில கள்ள நாணயங்கள் செய்து வழங்கப்பட்டன. அங்ஙனம் முலாம் பூசப்பெற்று தங்க நாணயங்களைப் போல் உலவிவந்த கள்ள நாணயங்களை தமிழர்கள் எளிதில் கண்டுபிடித்து விட்டார்களாகையால் ஒரே ஆண்டில் அவைகள் மறைந்தொழிந்தன.

## ஏற்றுமதியான விலங்குகளும் பறவைகளும்

பழந்தமிழர் நம் நாட்டிலிருந்து பாரசீக வளைகுடா, ஆப்ரிகா, சைனு முதலிய இடங்களுக்கு மயில், கிளி முதலிய பறவைகளை ஏற்றுமதி செய்தனர். எதென்ஸ—க்கு ஸெலியூகஸ் மன்னனல் பரிசளிக்கப்பட்ட புலியும், மெர்செல்லஸ் கண்காட்சிசாலையில் அகஸ்தஸ் மன்னனல் வைக்கப்பெற்றிருந்த புலியும், காண்டாமிருகமும் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியானவையே. இவை யாவும் தரை மார்க்கமாகக் கொண்டு போகப்பட்டவை. ஆனல் குரங்கு வகைகளிற் பல கடல் மார்க்கமாகவும் ஏற்றுமதி செய்யப்பட்டனவாம். அலெக்ஸாந்தர் படையெடுத்த காலந் தொடங்கி மேல் நாட்டார் யானைகளைப் போர்க் கருவிகளாக உபயோகிக்கக் கற்றுக் கொண்டனர். கி. மு. 25ல் ரோமர்களோடு போர் தொடுத்த ஹனிபால் என்பவன் இந்திய பாகர்களால் ஓட்டிச் செல்லப்பட்ட யானைப்படையை யுடையவனு யிருந்தானெனக் கூறப்படுகிறது.

இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான வேட்டை நாய்களை மேல்நாட்டார் சிறந்தனவாகக் கருதி விலைக்கு வாங்கிக் கொண்டனர். பாபிலோனியாவைச் சேர்ந்த நான்கு சமவெளிகள் வேட்டை நாய்களின் பராமரிப்புக்காக பிறாது ஆதிக்கத்தினின்றும் ஒதுக்கி வைக்கப்பட்டனவென ஹெரடாட்டஸ் கூறியுள்ளார். கி. மு. மூன்றும் நூற்றூண்டில் தம் தலைவனுக்காக உயிர் துறந்த நாய்களுக்கு அழகிய சமாதிகள் (பிணத்தின்மேல் கட்டப்படும் மேடைகள்) கட்டி அவற்றின் வீரச்செயலைக் கல்லில் வெட்டி வைப்பதை

கத் தன்மைக்கும் பலத்திற்கும் புகழ் பெற்றவை. அவ்வேட்டை நாய்கள் சங்கிலிகளால் கட்டப்பட் டிருக்கின்றனவென்பது "தொடர்படு ஞமலி" என்ற புறநானூற்றடியாலும் "தொடர்நாயாத் துன்னருங் கடிநகர்" என்ற பெரும்பாணாற்றுப் படையடியாலும் விளங்குகிறது. வேட்டையாடி முடிந்ததும் எல்லா நாய்களும் ஒன்று சேர்வதற்காக கொம்பூதுவது வழக்கம்.

ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு
வேப்பயி லழுவத்துப் பிரிந்த நின்
நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே. (அகம். 318)

நாகப் பாம்புகளும் மலைப் பாம்புகளும்கூட ஏற்றுமதி செய்யப்பட்டன. இந்தியாவிலிருந்து எகிப்திற்குக் கொண்டு போகப்பட்ட பாம்புகளின் ஒன்று ஒன்பதடி நீள மிருந்ததாம்.

விலங்குப் பொருள்களும் தாவரப் பொருள்களும்:— இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான பொருள்களுள் தந்தம் முக்கியமானது. கிரேக்கர்கள் சிற்ப நூலில் தலைசிறந்தது விளங்கிய காலத்தில் சிலைகளுக்கு மேற்புறம் தந்தங்களினால் அலங்கரிப்பது வழக்கம். ஜுஹூர்த்தைன் யுத்தத்தின்போது தான் பலதிறப்பட்ட முத்துவகைகள் ரோமாபுரிக்கு முதன் முதல்ஏற்றுமதி செய்யப்பட்டன. சிஸேரோ மன்னன் காலத்தில் முத்து மிகவும் அருமையான பொருளாயிருந்தமையின் ஒரு சிறந்த முத்து 8000 பவுன் விலை மதிப்பு கொண்டிருந்ததாம். விலை மதித்தற்கியலாத அம்முத்தை சிஸேரோவின் மகன் சாப்பாட்டுடன் சேர்த்து விழுங்கி விட்டு, தான் ஏராளமான செல்வத்தை பானமாகக் குடித்து வயிற்றினுள் அடக்கி வைத்திருப்பதாகக் கூறி மகிழ்ந்ததாக ஒரு கதையுண்டு. பலவகைச்சாயங்கள் ஏற்றப்பட்ட பஞ்சு தினிசுகள் பாரசீக மன்னனுக்கு அனுப்பட்டன. மத்தியதரைக் கடல் நாடுகளுக்கும் பட்டு வகைகளை ஏற்றுமதி செய்யப்பட்டன. உடுத்துவோர்க்கு மிகவும் அழகைக் கொடுக்கக் கூடியதும் மிகவும் மெல்லியதுமான ஒரு வகைத் துணி தமிழ் நாடுகளில் நெய்யப்பட்டது. எகிப்திலும், பலஸ்தீனத்திலும் அரசர்களால் வைத்து நடத்தப் பெற்ற நெசவுத் தொழிற் சாலைகள் பல விருந்தன. அவற்றிற்கு வேண்டிய பருத்தி முழுதும் இந்தியாவிலிருந்தே அனுப்பப் பெற்றன. டேரியஸ் மன்னன் காலத்தில் பாரசீகத்தில் மிளகு ஏராளமாக வரவழைக்கப் பட்டது. மிளகு மூட்டைகளை ஏற்றிச் செல்வதற்கு பெரும்பாலும் இந்திய மாக்கலன்களே உபயோகிக்கப்பட்டன. யவனர்கள் மிளகையும் சுக்கையும் சுரத்திற்கும் தலைவலிக்கும் மருந்தாக உபயோகித்தனர். கி. மு. 5ம் நூற்றாண்டில் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான பொருள்களுள் நல்லெண்ணெயும் (எள் நெய்.) ஒன்று. சோ நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட தேங்காய்களை யவனர்கள் தமது கோவிலில் கண்காட்சிப் பொருள்களாக அமைத்து வைத்திருந்தனர். தேக்கு, கருங்காலி முதலிய மரவகைகளும் ஏற்றுமதி செய்யப்பட்டன. மலையாளம், திருவாங்கூர், கன்னடம் முதலிய ஜில்லாக்களிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட தேக்கு மரங்களைக் கொண்டு பாரசீக வளைகுடாவில் ஏராளமான மரக்கலங்களைச் செய்து கொண்டனர்

இங்ஙனம் ஏற்பட்ட வியாபாரத்தின் பயனாய் ஆர்மீனியாவில் இந்திய நாகரிகம் பரவ ஆரம்பித்தது. வாலர்ஷாக் என்னும் அர்மீனிய மன்னன் ஆட்சியில் (கி. மு. 149-127) சிற்றரசர்களிருவர் அர்மீனியாவில் ஒரு குடியேற்ற நாட்டை (Indian Colony) அங்கே கிருஷ்ணனுக்கு ஒரு கோவிலும் பலதேவனுக்கு ஒரு கோயிலும் கட்டினர். வட இந்தியாவில் பலதேவர்க்கென யாண்டும் கோவில் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் காவிரிப்பூம் பட்டினத்தில்,

"வால் வளைமேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்"

விளங்கின. இங்ஙனம் பலதேவர்க்கென கட்டப்பெற்ற கோயில்கள் நாளடைவில் இடிந்து அழிந்துவிட்டன. வைணவ அடியார்கள் அவ்வப்போது பலதேவர் கோயிலிலுள்ள சிலையை அகற்றி திருமாலின் சிலையை நாட்டி வந்தமையின் பலதேவர் வணக்கம் தமிழ் நாட்டினின்றும் மறைந்துவிட்டது. கீழை நாடுகளுக்கும் இந்தியாவுக்கும் ஏற்பட்ட வியாபாரத்தின் காரணமாக இந்தியர்கள் வெளி நாடுகளுக்கு ஏராளமாய்க் குடியேறினர். "கிறிஸ்து பிறக்க பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே வட இந்தியர்கள் தரை மார்க்கமாய்ப் புறப்பட்டு இந்தியாவின் வழியாக சீனத்திற்கும், தமிழர்கள் கீழ்க்கடல் வழியாகக் கடாரத்திற்கும் (Burma) ஏராளமாகச் சென்று குடியேறி வியாபார நிலையங்களை ஏற்படுத்தினர் என " ஜெரினி " என்பார் ராயல் ஏஷியாடிக் சொஸைடி பத்திரிகையில் கூறியுள்ளார். அக்காலத்தில் வூ-டீ (Wu - ti) என்னும் சீனச் சக்கரவர்த்தி தற்காலத்திய துருக்கியரின் முன்னோர்களான ஹைஹயூங்-நூ எனும் கூட்டத்தாரை கோபிபாலே வனத்தின் வடக்கிலிருந்து துரத்திவிட்டான். அதன் காரணமாகச் சீனத்திற்கும் ஐரோப்பாவிற்கு மிடையே நடைபெற்ற வியாபாரம் தலைசிறந்தோங்க ஆரம்பித்தது. சிலகூட்டத்தார் தமிழ்நாட்டு துறைமுகங்களின் வழியாகவும் பட்டாடைகளை ஐரோப்பிய நாடுகளுக்குக் கொண்டு போயினர். எனவே, யவனர்கள் தமக்கு வேண்டிய அளவு பட்டாடைகளைத் தமிழ்நாட்டுத் துறைமுகங்களினின்றும் வரவழைத்துக் கொண்டனர். இந்த சகாப்தத்தில் கடாரம், மலேயா, சீமை முதலிய நாடுகளின் வியாபாரமும் பன்மடங்கு அதிகரித்தது. அவர்களுக்கு இந்தியாவினின்றும் கிடைத்த பொருள்களுள் மிளகு முக்கியமானது. மிளகையும் வாசனைப் பொருள்களையும் கீழ் நாடுகளுக்கு அனுப்பிவிட்டு தமக்கு வேண்டிய சர்க்கரையும் பட்டும் வாங்கிக்கொண்டனர்.





# முன்னேற்றம் என்பது என்ன?

(பண்டிதை—அசலாம்பிகை அம்மையார்.)

இம்மொழி பொதுவாக நோக்குமிடத்துப் புதிய புதிய துறைகளில் ஆர்வம் கொண்டு அவற்றைப் பின்பற்றுவது என்னும் கருத்து குறிப்பாகத் தோன்றுகிறது. சற்று ஊன்றிக் கவனிக்குமிடத்து நெடுநாளைக்குமுன் நிலவியிருந்த வழக்கங்களையே மீண்டும் பின்பற்றுவதென்பது புலப்படும். இதன்படி பார்த்தால் பின்னேட்டமேயாகும்.

முற்பட்ட காலத்தில் சிறப்பாகக் கருதிக் கையாண்டுவந்த முறைகளை மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டுமென்கிற உணர்ச்சி பொதுமக்கள் கவனத்தில் முளைத்திருக்கிறது. இப்புதிய விருப்பம் முன்னேறுகையில் அப்படியே கலப்படமின்றிப் பரிணமிக்க முடியாது. இடைக்காலத்தில் மக்கள் மனதைக் கவர்ந்து நின்ற பல மாறுதல்களில் சிலவாவது இப்பின்னேட்டமாகிய முன்னேற்றத்தோடு கலந்து வருவதியற்கையே.—புதிய வெள்ளம் புரண்டு வரும்பொழுது நெறியில் இடம்பெற்றுக் கிடந்த குப்பை கூளங்களும் அசுத்தங்களும் அடித்துக்கொண்டு வருவதை நாம் சாதாரணமாகக் காண்கிறோம். அதுபோல ஜனநாயக முன்னேற்ற வெள்ளத்திலும் ஊறிக் கிடந்த இடைக்காலத்திய பயனற்ற உணர்ச்சிகள் பிரிக்க முடியாமல் கலந்து நிற்கின்றன. 'இராமன் செய்ததைச் செய்; கிருஷ்ணன் சொன்னதைக் கேள்' என்பது அறிஞர் கட்டுரை.

இதன் பொருளென்ன? நவ யௌவன வயதில் எல்லாச் சுகங்களையும் இணையற்ற ஏகாதிபத்தியப் பெரும் பதவியையும் துறந்து வனம்புகுத மலர்ந்த முகத்துடனும் துணிந்தது இராமன் செயல். இன்றும் இனியென்றும் இராமபிரானுக்குக் குன்றாப் புகழைத் தருவது இந்த தியாகமேயாகும். தியாகத்தின் பெருமை எவ்வளவு சதுர்யுகமாயினும் மழுங்கக் கூடியதல்ல.

பிறகு கிருஷ்ணன் சொன்னதைக் கேள் என்பதின் கருத்தென்ன?

"பயன் குறியாது கடமையைச் செய்" என்பதே கீதா சாஸ்திரத்தின் முத்திரை. ஆத்மா ஒன்று உண்டென்கிற பிரக்ஞை உள்ளவரையில் உனக்குரிய கடமைகளை விருப்பு வெறுப்பின்றிச் செய்ய நீ கடமைப்பட்டவன் என்பதே முடிவு. சோம்பேறி வேதாந்தம் பேசிப் பிறர்க்குப் பாரமாயிருக்க எவருக்கும் உரிமை கிடையாதென்பது அதன் கருத்து. இங்கே தியாகம் செய்பவர் சுயநலம் அனைத்தையும் தியாகம் செய்யலாமே தவிர கடமையைத் தியாகம் செய்யக்கூடாது. தியாகிக்குக் கடமை கிடையாதென்று புகல்வாராயின் அவர்கள் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்பவராவர். அங்ஙனமாயின் இராமன் வனம் சென்றபோது தமது வில்லாகிய

கோதண்டத்தை அயோத்தியில் உள்ள ஆயுத சாலையிலேயே வைத்துவிட்டுப் போயிருக்கலாம். தியாகமென்பது தன்னலத்தை மட்டில் கைவிடுவதாக முடிகிறதே யல்லது பரோபகாரச் சேவையைக் கைவிடுவதாகவில்லை. தன்னலம் தேயத்தேய பொதுநல சேவை வளர்ச்சி பெறுகிறது. தியாகமென்பது இயற்கையின்படி அரும்பும் ஆசைகள் அனைத்தையும் தயங்காமல் வெறுக்கும் ஆண்மைக்கே பொருந்தும். அங்ஙனமின்றி மூவாசைகளில் ஒன்றன் பொருட்டு மற்றொன்றைத் துறப்பதற்குப் பெயராகாது. பெண்ணின்பம் வேண்டிப் பதவியைத் துறப்பதையும், பொருள் நலைக்காகப் பெண்ணைத் துறப்பதையும் தியாகமாக ஒருசிலர் கருதுவதாயின் அது தியாகமென்னும் பெயரையே அசுத்தப் படுத்தியதாகும். ஈண்டு உதாரணமாகச் சுட்டிய இராமன் தியாகத்தின் மருடமாக ஒளிர்ந்தும் கடமையை ஆற்றினன். அடுத்தபடி கடமையைப் பயன்குறியாது செய் என உணர்த்திய கிருஷ்ணன் எப்பற்றுமின்றி எல்லாத் துறைகளிலும் ஈடுபட்டான். பன்னிரண்டு வயது முடியுமுன் அம்மானாகிய கம்ஸனைக் கொன்றதாகச் சரிதம் கூறுகிறது. இந்தப் பன்னிரண்டு வயதுக்குள் சமவயதுள்ள கோபியர்களுடன் கோகுலத்தில் விளையாடி யிருக்கிறார். தேவர்களெல்லாம் கோபிகைகளாகப் பிறந்து பக்திப் பிரேமையினால் கண்ணனிடம் கட்டுண்டது உண்மை. இதனைக் காலக்கிரமத்தில் சரித்திரம் எழுதுவோர் கேவலம் சிற்றின்பக்கனமாக மாற்றினர்; ராஸக்கிரீடை என நடிக்கவும் தொடங்கினர். கிருஷ்ணன் ருக்மணிதேவி முதலிய பல பெண்களை உலக பாவனைப்படி மணந்து மக்களையீன்ற கதைகளும் பக்த பராதீனனாக விருந்து அவரவர் விருப்பங்களை நிறைவேற்றி வைத்த நடிப்பேயன்றிப் பந்தத்தால் அன்றென்பது நன்கு சிந்திப்போர்க்கு விளங்கும். பாகவதத்தை மொழிந்தவர், சுகப்பிரம்மம் என்னும் உதாரணம் ஒன்றே கண்ணன் தெய்வீகத் தகுதிக்குச் சான்றாகும் என்றருளினர். நமது மகான் இராமகிருஷ்ண பரமஹம்ஸர் உயிரற்று கருகிய பிண்டமாக உத்தரையின் கெர்ப்பத்தில் பிறந்த அபிமன்யுவின் சிசுவை நான் நித்திய பிரமசாரியாக இருப்பது உண்மையானால் இது உயிர்பெற் றெழக்கடவது என்று கூறிக் கரத்தால் பரிசித்ததும் உயிர் பெற்றதாகவும் அதே காரணத்தால் பரீட்சித்து மகாராஜன் எனப் பெயர் பெற்றதாகவும் கூறும் சரித்திர உண்மையைத் தமிழ்நாட்டில் உணராதார் மிகுதியும் இரார். பற்றுதலின்றிக் கடமையைச் செய்யும்படி போதித்த கண்ணன் அபிமன்யு வதத்திற்குத் தானே வழிசெய்தார் என்பது ஒன்றே சொன்னபடி செய்து காட்டிய உதாரணமாகும். பாண்டவர்கள் பெற்ற வெற்றிக்குக் கண்ணன் காரணமெனப் பொதுவாகக் கருதப்படுகிறதாயினும், உண்மையில் பாண்டவர் பெற்ற தோல்விகளுக்கும் கண்ணனே காரணன் என்பதைத் தருவிக் காண்பதில்லை. இளம் பஞ்சபாண்டவர்களை முடித்ததும் கண்ணன்தானே. இவ்வுதாரணங்களால் நாம் அறியவேண்டிய தென்ன? தியாகத்தில் நிஷ்காமிய கடமையையும், நிஷ்காமிய கடமையில் தியாகத்தையும் காண்கிறோம். தற்காலம் தேச விடுதலைக்குக் கர்த்தர்களாகிய லோகமான்யரும் உலக சிரேஷ்டரும் கைக்கொண்ட ஆயுதங்கள் மேலே ராமகிருஷ்ணர்கள் கையாண்ட தியாகமும் கடமையும்தான் என்பதை உன்னிப் பார்க்குங்கால் நமது முன்னேற்றமென்பது மிக மிகப் பிற்பட்ட காலத்தில் வேதவியாசர் என்னும் சரித்திர ஆசிரியரால் எழுதிவைக்கப்பட்டிருக்கத் தொன்மை முறைகளே என்பது விளங்கும்.

சமீபத்தில் சிவ கிராமத்திலிருந்து மகாத்மா "மௌனத்திலிருந்து பிறந்த ஆக்ஞை" என மகுடமிட்டு வரைந்திருக்கும் கட்டுரையில் "காங்கிரஸ் மகாசபைக்குச் சேர்ந்துள்ள கூட்டப் பெருக்கினால் வெற்றியில்லை. அதில் உண்மையாக ஒருசிலர் செய்த தியாகமே வெற்றிக்குக் காரணம்" என விளக்கியுள்ளார். இதுதான் உண்மை. பேச்சும் எழுத்தும் மக்களை ஊக்குமே தவிர முடிவான வெற்றியைத் தரமுடியாது. புனிதமான தியாகந்தான் பாரதபூமிக்கு அன்றும் இன்றும் விடுதலையை அளிக்கவல்லதாய் விளங்குகிறது.

இராமன் இரண்டாவது யுகத்தில் பரிபூர்ண தியாகி (இளமையிலேயே துறந்தும் புலனடக்கல்) ஆகி வழிகாட்டினன். அங்ஙனமிருந்தும் கடமையைச் செய்ததை நன்கு உணர மக்கள்தவறி அவரவர்மட்டில் நற்கதி பெற முயல்வது ஒன்றே கடமையெனக் கருதத் தொடங்கினர். தெள்ளிய அறிவில்லாத பாமரர்களை உய்விக்கும் பரந்த கருணை மறைந்தது. அவ்வித நிலைமையைப் போக்கவே மூன்றாவது யுகத்தில் அவரே கண்ணனாக அவதரித்தது முற்றுந்துறந்த ஞானிக்கும் கடமையுண்டு. அதைச் செய்தே தீர்தல் வேண்டும் என்று வலியுறுத்தித் தானும் செய்து காட்டினர். பிரம்மஞானிகளில் தலைசிறந்த ஜனகர் அரசராகவே இருந்தார். சைவ உலகில் சுழறிற்றறிவார் நாயனார் அவ்வண்ணமே பற்றின்றி அரசுரிமையை யேற்றார். இத்தகைய உதாரணங்கள் பலவுள. ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தோன்றி மத வாதிகளின் முரண்பாடுகளைப் போக்கி உண்மை நிலைபெறச் செய்ததோடு விவேகாநந்தர் என்னும் சிஷ்யர் அகத்தே ஞான ஒளியை யேற்றி மேல்நாடுகளுக்கும் காஷாய உடையுடன் சென்று அங்குள்ள அந்தகாரத்தைப் போக்கி வெளிச்சம் உண்டாக்கி வர அநுமதித்தார். தற்காலம் சமூக சுதந்தரப் பேற்றினைப் பாரதமக்கள் பெறும்படி செய்ய, லோகமானிய பாலகங்காதர திலகரும் மகாத்மா காந்தியடிகளும் தோன்றினர். முற்காலப் பெரியோர் வலியுறுத்திய தியாகாக்கினியிற் குதித்தும், கடமைக் கடலில் மூழ்கியும் நேரடியான வெற்றி பெறல் அரிதென வுணர்ந்து கால நிலைக்கேற்ப அஹிம்ஸை யெனும் மூன்றாவது ஆயுதத்தையும் ஏந்தினர். அந்த அஹிம்ஸையும் அஹிம்ஸா பரமோதர்ம: என வேதத்தில் மொழிந்ததே—உண்மையான தியாக புத்தியும் பற்றற்ற கடமையில் உறுதியும் உள்ளவர்களே அஹிம்ஸையாகிய ஆயுதத்தைத் தாங்க முடியுமாதலின் மகாத்மாவே அதைத் தாங்கிக் கடன் ஆற்றுகிறார், ஆற்றும்படி பல பக்குவிகளைத் திரட்டுகிறார்.

சாதாரணமான பொதுமக்கள் வாழ்க்கைத் துறைகளில் சகிக்க முடியாத மாறுதல்கள் நுழைந்தும் செயல்கள் பிறழ்ந்தும் கோணியதினால் போலி யின்பம், பகட்டு விருப்பம், வறுமை, சோம்பல்யாவும் களைகள்போல் வளர்ந்துவிட்டன. இயற்கை யன்னைக்கு அறிவுடை மக்களைப் போல் அறிவில்லாப் பேதை மக்களும் உரிமைப் புதல்வர்களேயன்றோ?

ஈன்ற தாய் விவேகிகளான புதல்வர்களிடம் காட்டும் கவலையைவிட அவிவேகிகளான மக்களிடமே அதிகக் கவலை காட்டுவதியல்பு.—அவ்வாறே தமது பாமர சகோதரர்களைத் தவறான வழிகளிலிருந்தும் திருப்பி உய்விக்கச் செய்யும் பொறுப்பு மேதையுள்ள சகோதரர்களின் கடமையாகும்.

இதுவே அன்னைக்கு உவப்பான பணி. இதைச் செய்யும்பொருட்டே கால தேவதை காலதேச வர்த்தமானங்களுக்கேற்ற தலைவர்கள் சிலரைத் தோற்று விக்கின்றது. இவர்களே தன்னல மறந்து பொதுஜன சேவை புரியும் தியாகிகள் சன்மார்க்களாவர்—இவர்களே தற்காலம் பாரதநாட்டை விழிப் பிக்கவும் உயிர்ப்பிக்கவும் செய்தவரும் லோகமான்யரும் மகாத்மாவும் அவர் வழி பேணி நிற்கும் அன்பர்களுமாவர்.

முந்தியவர் 'நாம் அடிமைகளல்ல. சுதந்தரமென்பது பிறப்புரிமை. அதை அடைந்தே தீருதல் வேண்டும்' என்பதான எண்ணத்தையும் விருப் பத்தையும் மக்களிடம் எழுப்பினார். அவ்வாறு உணர்த்தியதற்காக அவர் நினைக்கவு முடியா துன்பங்களுக்குள்ளாகி தன் வாழ்வையே பலி கொடுத் தார். அவர் சிறிதளவும் மனம் சோரவில்லை.

அவரால் எழுப்பப்பட்ட ஆசையைப் பூர்த்தி செய்ய வழி கோல முற் பட்டார் மகாத்மா காந்தி யடிகள்.

"மானம் குலம் கல்வி வண்மை—அறிவுடைமை
தானம் தவ முயற்சி தாளாண்மை—தேனின்
கசி வந்த சொல்லியர் பாற்கா முறுதல் பத்தும்
பசி வந்திடப் பறந்துபோம்"

என்ற ஔவையார் வாக்கின்படி நாட்டில் பசிப்பிணி தாண்டவமாடும் படி வறுமை குடிகொண்டது. கைத்தொழில் நாசமாகிச் சோம்பல் இடம் பெற்றது. இயந்திரங்கள் எங்கும் பரவின. இவைகளைப் போக்கி வேத காலத்திலிருந்து இருடியர்கள் புனிதமாக மனதை ஒருமைப்படுத்துவதற் காகவும் கைக்கொண்டதாக ருக்வேதத்தில் கூறப்படும் நூற்றல் தொழிலைத் தற்கால மக்கள் கைக் கொள்ளும்படி அடிகள் வற்புறுத்தினார். இது மிக மிகப் பின்னேற்றமே யென்பது வெள்ளிடை. பரதேசச் சாமான்களைப் பகிஷ்கரித்து சுதேசிச் சாமான்களையே ஆதரிக்கச் சொல்வதும் பழம் பாடமே.

இயந்திரங்களை அணுகாது கைக்குத்தரிசியைப் புசிப்பதே சிறப் பென வலியுறுத்தி வேண்டுவதும் பழங்கால முறையே.

சுதேசிப் பொருள்களை வாங்க விழைவோர் பலர் இருந்தாலும் அவை களை உற்பத்தி செய்ய முன் வருவோர் இல்லையென்றே கூறலாம். இக் குறையைப் போக்கவே சமீபத்தில் ஆரம்பத்திலிருந்தே கைத்தொழிற் கல் வியைப் பள்ளிகளில் புகுத்த முயன்றிருக்கிறார். புதிய முறைகளில் பழ மையை அழிக்காமல் உதவக் கூடியவைகள் உளவேல் அவை ஆக்கந்தாத் தடையில்லை.

'பெரியாரே உலகம். உலகமே பெரியார் என்பதை நன்குணர்ந்து அன்னார் கற்பிக்கும் வழி நின்று நன்மை பெற நாட்டு மக்கள் நல்லுடலும் நல் உளமும் ஓம்புதல் இன்றியமையாததென்பதைச் சிந்தியாமல் இருப்பதற் கில்லை. பெரியார் கட்டளையை ஏற்று ஊக்கத்தோடு முயற்சியில் இறங்க நல்லுடலும் நல்லுளமும் முக்கிய சாதனமாகும். அவ்விரண்டும் ஒழுக்கத் தைக் கட்டாயமாக ஓம்பினாலன்றி அடையக் கூடியவைகளல்ல. இத் தகுதி

களைப் பெறவொட்டாமல் தடுப்பதற்குப் பல வழிகள் உளவாயினும் மது பானமும் சலனப்படக் காட்சிகளும் முதன்மையானவைகள் என்பது மறுக்க முடியாததாகும். இவைகளால் விளையும் அபாயம் க்ஷணத்திற்கு க்ஷணம் கட்டுக் கடங்காமல் வளர்ச்சி பெறுகிறது. முந்தியதான மது பானம் விரைவிலேயே நாட்டை விட்டு வெளியேறு மென்கிற நம்பிக்கை தற்கால காங்கிரஸ் ஆட்சி முறையின் வரப்பிரசாதமாக ஏற்பட்டிருக்கிறது. மற்றொன்றாகிய படக் காட்சிச் சாலைகளில் நல்லுணர்ச்சியைப் பாழ்படுத்தக் கூடிய ஆட்சேபகரமான கதைகளையும் அருவருப்புக்கிடமாகிய ஹாஸ்யங்களையும் அவசியம் தடுத்தல் வேண்டும். அடியோடு இந்த உயிரற்ற நிழல் ஆட்டம் எடுபடும் காலம் ஒன்று ஏற்படுமாயின் அதைவிடச் சிறந்த சன்மார்க்க வளர்ச்சிக்கு ஆக்கந்தருவது வேறில்லையென்று கூசாமற் கூறலாம். மிக்க விற்பன்னர்களால் சாதாரண மக்களுக்கு பக்தியையும் நீதியையும் புகட்டும் நோக்கங்கொண்டு கதா காலட்சேபங்கள் ஆதியில் ஏற்பட்டன. அம் முறை அறவே மறைந்துவருவது கண் கூடு. அதிலும் எளிதான முறையில் நாடகங்களும், பதுமையாட்டங்களும் கல்வி யறிவில்லாத மக்களுக்குக் களிப்பூட்டி வந்தன. அவைகளெல்லாம் மறைந்துவிட்டன. அவைகளின் அடிச்சுவடுகூட தற்கால யுவர்கள் உணர இடமில்லை.

சமயோசிதமாகவும் சந்தர்ப்ப அநுகூலமாகவும் காலட்சேப விற்பன்னர்கள் மனோதர்ம உலகில் தங்கள் மேதையைக் காட்டி சபையை இன்புறச் செய்துவந்த காலத்தில் அவர்கள் சாதுரிய சக்தியின் அருமையை அநுபவித்த முதியர் இன்னும் பலர் உளர்.—அவர்களுக்கு தற்காலத்திய உயிரற்ற உடலற்ற உளமற்ற நிழலாட்டம் எங்ஙனம் இனிக்கும்?

இன்பமாக நோக்கும் தற்கால யுவர் யுவதிகளை இவைகள் எவ்வளவு தூரம் மாறுபடச் செய்து ஸாரமற்ற சக்கைகளாக்கி விட்டதென்பதை அறிவிற் சிறந்தவர்களும் ஒழுக்கப் பற்றுடையவர்களும் உணர்ந்திருக்கின்றனர்.

தற்காலம் இச் சினிமாப் பித்தர்கள் சமூக மதிப்பில் மிகவும் இழுக்குற்று வழுக்கி வீழ்கின்றனர் என்பது வெளிப்படை.

புது வெள்ளம் புரண்டு வருகையில் இடையிற் றோன்றி ஊறிய அசுத்தங்கள் கலந்து நிற்பது இயற்கையென நாம் மேலே குறிப்பிட்டதும் இதைத் தான்.

கைத்தொழில் வளம்பெற்று கட்குடியொழிந்து மக்கள் தலை தூக்கினும் ஒழுக்கத்தை வேறாக்கும் கேவலமான படக் காட்சிகள் கட்டாயம் தடுக்கப்படல் வேண்டும். இன்றேல் நாடு நன்மலர்ச்சியின் பயனைப் பெற முடியாது. அவ்வாறாயின் பழயன கழிதலும் புதியன புகுதலும் என்ற பழமொழி மாறி, புதியன கழிதலும் பழயன புகுதலும் வழுவல எனப் புதுக்கப்படலாம்.



# அழகிய நம்பியின் திருவுலா

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

## II

திருக்குறுங்குடியின் திருமாட வீதியிலே, அழகிய நம்பிப்பெருமான் ஆரோகணித்துள்ள திருத்தேர், அசைந்து அசைந்து செல்வதொரு மலையேபோல் சென்று கொண்டிருந்தது. அவ்வேளையிலே, நீலவானத்திலே, மேனகை—அரம்பை—திலோத்தமை—ஊர்வசி முதலிய அப்ஸர மங்கைகளும் கந்தர்வநாட்டுச் சுந்தரிகளும் கூட்டங் கூட்டமாக வந்து கூடி நெருங்கி நின்றனர். அவர்கள் தமது மார்பிலும் தோள்களிலும் அணிந்திருந்த விண்ணுலகத்துச் சந்தனத்தின் நறுமணம், திருக்குறுங்குடி வீதியில் நடந்து கொண்டிருந்த மண்ணுலகத்து மாந்தரின் மீதும் வீசலாயிற்று. அவ்வமர மங்கைகளின் கருவிழிகளாகிய வண்டுகள், கீழே திருத்தேரில் சென்று கொண்டிருந்த அழகிய நம்பியின் வடிவழகாகிய அமிர்தத்தை அள்ளி அள்ளிப் பருகலாயின. அத் தேரில் கட்டப்பட்டிருந்த பாக்குக்குலைகள் வாழைப்பழக் குலைகள் செங்கரும்புகள் முதலியவை, அத் தேவமாதர்களின் கண்களுக்குப் பெருமகிழ்வூட்டின. நம்பி யெம்பெருமான் மீதும் அவரது திருவடிகளைச் சுற்றிலும் கிடந்த அழகிய மலர்மாலைகளிலிருந்து எழுந்த நறுமணம், 'குமு' 'குமு'வென்று வானளவும் வந்து பரவலாயிற்று. அக் காட்சியைக் கண்குளிரக்கண்டு களித்துக்கொண்டிருந்த அமர மங்கையர், அவ்விடத்திற்கு வராமலிருந்த மற்ற மங்கைகளையும் அழைக்கக் கருதி, "வாரீர்! அழகிய நம்பியின் அற்புத பவனியைக் கண்ணாரக் கண்டு வாயார வாழ்த்தி மகிழ, எல்லோரும் வாரீர்! வாரீர்!! இங்கு உல்லாஸமாக உலாப்போகும் உம்பர் நாயகராகிய அழகிய நம்பியின் வடிவழகைக் கண் குளிரப் பார்க்க வாரீர்! வாரீர்!"—என்று உற்சாகம் பொங்கித் ததும்பும் உச்சக்குரலில் கூவியழைக்கலாயினர்.

"கார் போன்ற கருநிறமுடைய கூந்தலழகைப்பெற்ற தோழிகளே! முற்காலத்திலே, 'மூலமே!' என்று ஓலமிட்டழைத்த யானைக்கு அருள் புரிய, அரை குலையக் குழல் குலைய ஓடிவந்த அருளாளர், இந்நாளில் இரவும் பகலும் தம்மையே நினைத்து நினைத்து நெஞ்சு கரைந்து உருகி நிற்கும் கொங்கைகளாகிய மத்தகங்களை உடைய இளம்பெண்யானை போன்ற என்னிடம் வந்து கலந்து இன்பம் தந்தருள இன்னும் மனம் இரங்கினரில்லை. இது என்ன நீதி?"—என்று முறையிட்டு நின்றாள், ஒரு தேவமாது. "தன்னை நம்பிநின்ற பாலனைக் காத்தருள, நரசிங்கமூர்த்தியாகத் தோன்றி இரணியனின் மார்பகத்தை இரு கூறுகளாகப் பிளந்தருளினரென்றும்; எதிர்த்து ஓடிவந்த 'குவலயா பீடம்'—எனும் மதயானையின் இரு தந்தங்களையும் பற்றப் பிடுங்கி யருளினரென்றும், இப் பெருமானின் வீரச் செயல்களை நான் பன்முறை கேட்டிருக்கிறேன். மறைந்து நின்று மலர்க்

கணை தொடுத்து என் மனத்தை வதைத்து நிற்கும் மாரவேளின் செருக்கை அடக்க, இப்பெருமான் இன்னும் எளியேன்பால் மனம் இரங்காததன் காரணம் என்னவோ?"—என்றாள் மற்றொருத்தி.

வீதியில் தன்னை ஒத்த சின்னஞ்சிறுமிகளுடன் சிற்றிலிழைத்து விளையாடிக் கொண்டிருந்த சின்னஞ்சிறு செல்வி ஒருத்தி, சுமார் ஏழு வயதுடைய பேதை, திருத்தேரில் எழுந்தருளியிருந்த அழகிய நம்பியின் வடிவழகில் ஈடுபட்டுத் தன்னை மறந்து நின்றாள். அவ்வேளையிலே, அப் பெருமான்மேல் அச் சிறுமி கொண்ட காதற்பெருக்கினாலே, அவளது சின்னஞ்சிறு செல்வமணிக் கரங்களில் அணிந்திருந்த வளைகள் கழன்று கீழே விழுந்தன; முடிந்திருந்த அவளது கருங்குழலும் அவிழ்ந்து தொங்கியதன் பயனாக, அவள் அதில் அணிந்திருந்த நறுமண மலர்கள் தரையில் உதிர்ந்து சிதறின. ஊழிக்காலம் வருமளவும் எல்லைக்குள் கட்டுப்பட்டு கரைகடந்து செல்லாமல் அடங்கி நிற்கும் கருங்கடலேபோல், நெஞ்சினின்றும் பொங்கி எழுந்த ஆசையை வெளியிட்டு விடாமல் அடக்கிக்கொள்ள முயன்றன அவளது சின்னஞ்சிறு கருவிழிகள். தன்னையொத்த சிறுமிகளுடன் வீதி மணலில் விளையாடிக் கொண்டிருந்த வேளையிலே, பவனி விழாவைக் கண்டு களிக்க வீதியில் வந்த தனது அன்னையைப் பின்பற்றித் திருத்தேரருகில் சென்று நின்றாள் அப் பேதை. "நம்பீ! நம்பீ! என்னை நன்னா வைக்கணும். எல்லாக் குத்தத்தையும் பொறுத்துக்கணும். என்மேல் மனசு இரங்கணும்"—என்று தனது அன்னை சொல்லிக்கொடுத்த வண்ணமே நம்பியை நோக்கிக் கை கூப்பியவாறே குழலினும் இனிய மழலைமொழியில் கொஞ்சிக் குழறி நின்ற அச் சிறுமி, நம்பியின் திருமார்பில் அசைந்து கொண்டிருந்த மலர்மாலையைக்கண்டு எப்படியேனும் அதை வாங்கிக் கொண்டுவிட வேண்டுமென்ற ஆசை மிகுந்து, தனது அன்னையை நோக்கி, "அம்மா! அம்மா!! பெருமாள் கழுத்திலே போட்டிருக்குது பாரு மாலை, அந்த மாலையை நம்ம வீட்டுப் பெருமாளுக்குப் போட்டுப் பார்க்கப் போறேன்; அத்தை எனக்கு வாங்கிக் கொடு. ஊ...ஊ...ஊம்"—என்று கண்ணைப் பிசைந்துகொண்டு நின்றாள். "அடி, பைத்தியமே! அது எப்படி நமக்குக் கிடைக்கும்?" என்றாள் அன்னை. அதைக்கேட்டு மனம் உடைந்த சிறுமியின் சிறிய கரிய விழிகளிலிருந்து, சில நீர்த்துளிகள் சிந்தின. அதைக்கண்ட அன்னை, அவளை வாரி எடுத்து முத்தமிட்டு இடுப்பில் வைத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பிச் சென்றாள்.

திருத்தேர், அவ் வீதியினின்றும் திரும்பி அடுத்த வீதியில் சென்றது. ஒரு வீட்டுக்குள்ளே, வெண்முத்து மாலை புரளும் மார்பகமும் காதற்கொடி கொழுந்துவிட்டுப் பற்றிப் படர்ந்து வளர முயலும் பருவமும் உடைய பதினொரு வயதுடைய பெதும்பைப் பெண் ஒருத்தி, காதலிகள் சிலர் தம்மைப் பிரிந்து சென்றிருந்த காதலரின் அழகிய வடிவங்களை எழுதிக் கொண்டிருந்த இடத்திற்குச் சென்று நின்று, அச் சித்திரங்களைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தாள். அவ்வேளையிலே, அவளது தோழிகளுள் ஒருத்தி அங்கு ஓடிவந்து அவளை நோக்கி, "வீதியிலே, நம்பி தேர் பவனி வருது; ஓடிவா! ஓடிவா!"—என்று ஆவல் பொங்கிப் பெருகும் குரலில் கூறி நின்றாள். அச் செய்திகேட்டுக் கருத்து உருகிக் களித்து நின்ற அப் பெதும்பைப் பெண், தனது தோழிகளுடன் புறப்பட்டு வீதியில்

வந்து திருத்தேரில் எழுந்தருளியிருந்த அழகிய நம்பியைக் கண்குளிரக் கண்டு துதித்து நின்றாள். அந் நம்பியின் அருட்காட்சியின் குளிரொளி, அவளது நெஞ்சில் அரும்பியிருந்த காதல் மொக்கை அலர்த்தத் தொடங்கியது; அந்த நம்பியின் வலத்திருத்தோளிலே, ஒரு அழகிய மங்கை வீற்றிருப்பதுபோல் அவளது கண்களுக்குத் தோற்றியது. அதைக்கண்டு பெரிதும் வியந்த அவள், தனது தோழிகளை நோக்கி, “தோழிகளே! நம்பியின திருமார்பில் திருமாது இடையறாது குடிகொண்டிருக்கிறாளென்பதை, நான் பன்முறை கேட்டறிந்ததுண்டு; அவளைத் தவிர, இப்பெருமானின் திருத்தோளின்மேல் வீற்றிருக்கும் இவள் யாரென்பதைச் சொல்லுங்கள்”—என்றாள். அதைக்கேட்ட அத்தோழிகளுள் ஒருத்தி கலகலவென்று நகைத்து, “அடி, அசடே! அது கூடத் தெரியவில்லையா உனக்கு? நமது நம்பிக்கு என்றென்றும் குன்றாத பெருவெற்றியையே விளைவித்து வருபவளாகிய வீரலக்ஷ்மியே அவள். அந்த வீர லக்ஷ்மிக்குத் தகுந்த உறைவிடம் நம்பியின் வீரத் திருத்தோளே என்பதைக்கூட உன்னால் உணர்ந்துகொள்ள முடியவில்லையே!”—என்றாள். அம் மொழி கேட்டு அகம் குளிர்ந்த அப் பெதும்பை, அவ்வீர நம்பியைத் தனது கள்ளக் கடைக்கண்களால் நோக்கிப் புன்னகை புரிந்து நின்றாள்; அவ்வீரத் திருத்தோளைத் தழுவி மகிழும் தனிப்பெரும் பேறு தனக்கும் வாய்க்கக் கூடுமோ என்ற எக்கமிகுதியினாலே, அவளது உள்ளம் அனலில் பட்ட மெழுகைப்போல் பெரிதும் கரைந்து உருகியது. நீலவானில் பாலொளி வீசிச் சிரித்து நின்ற மோகன சந்திரனைக்கண்டு கொஞ்சங் கொஞ்சமாக இளகிக் கரையத் தொடங்கும் சந்திரகாந்தக் கல்லைப்போல், அவளது நெஞ்சமும் கரைந்து உருகத் தொடங்கியது. தான் சிறிதும் எதிர்பாராத வேளையிலே, தாமாக வலியவந்து காட்சி தந்தருளிய அருட்பெருவள்ளலாகிய நம்பி, தன்னைக் கைவிட்டுவிட மாட்டாரென்ற நம்பிக்கையும் அவளது நெஞ்சில் தோன்றி அவளது கவலைகளை ஒருவாறு மறக்கச் செய்து, அவளுக்கு ஆறுதல் அளித்தது. மாரவேள் ஏவிய மலர்க்கணை ஒன்று, அவளது நெஞ்சில் புகுந்து காதல் தீயை எழுப்பத் தொடங்கிவிட்டது.

திருத்தேர், மற்றொரு தெருவில் சென்றது. ஒரு வீட்டிலே, சுமார் பதின்மூன்று வயதுடைய மங்கை ஒருத்தி, சில மலர்களை மாலையாகத் தொடுத்துக் கொண்டிருந்தாள். அங்கு ஓடிவந்த அவளது தோழி அவளை நோக்கி, “பூமாலை கட்ட இதுவா சமயம்? வா ஓடிவா! வீதியிலே, நம்பி எவ்வளவு கோலாகலமாகத் தேரில் ஏறிப் பவனி வருகிறாரென்பதைப் பார்!”—என்று கூறினாள். அதைக்கேட்ட அவ் விளமங்கை, தொடுத்துக் கொண்டிருந்த மாலையைக் கீழே எறிந்துவிட்டு தெருவில் ஓடிவந்து நம்பியைக் கண்குளிர நோக்கிக் களித்து நின்றாள். மறுகணத்தில், அப் பெருமான் தன்னிடம் இன்னும் பராமுகமாகவே இருந்து வருவதை எண்ணி அவரிடம் ஊடல் கொண்ட அவள், அவரை நோக்கி, “விருந்தாவனத்திலே ஒரு கோபிகையிடம் கொண்ட மையல் மிகுதியினாலே, நீர் அலைந்து கொண்டிருந்ததையெல்லாம் மறந்து விட்டீரோ? உள்ளத்தினின்றும் பொங்கி எழுந்த காதல் தீயை அடக்க முடியாமல் உம்மை நாடிவந்த கோபிகை ஒருத்திக்கு, ‘இவ்வுடல் முழுதும் உனக்கே சொந்தம்; இதை நீ உன் விருப்பப்படி ஆண்டுகொள்’—என்று அவளிடம் உடலை ஒப்புவித்து

நின்ற உம்மைப் போன்றவர், வேறு எவரேனும் உண்டோ? உம்மைப் பிரிந்து தனித்திருப்பதால், எனது நெஞ்சில் பொங்கிப் பெருகும் சோகமும் உம்மைத் தழுவி மகிழ எனது உள்ளத்தில் பொங்கி எழும் ஆசையும் எத்தகையவை என்பதை நீர் அறியாதவரல்லவே! 'பெண் என்றால் பேயும் இரங்கும்'—என்பது முதுமொழி யன்றோ? 'கிருபாநிதி' என்றும் 'தீன பந்து' என்றும் போற்றப்படும் நீரே எளியேனிடம் மனம் இரங்காவிட்டால், என்னிடம் மனம் இரங்கக் கூடியவர்கள் இங்கு வேறு எவர் உளர்? உமது திருமார்பைத் தழுவி மகிழும் பாக்கியத்தை எனக்கு வாய்க்கச் செய்தருள, உமது திருவுள்ளம் எப்பொழுது இரங்குமோ அப்பொழுது இரங்கட்டும். அதுவரையில், உமது திருமார்பில் படிந்து அசைந்து புரண்டு கொண்டிருக்கும் திருத்துழாய் மாலையையாவது எளியேனுக்கு அளித்தருளத் திருவுள்ளம் இரங்கியருள்வீராயின், அதையேனும் எனது மார்போடு அணைத்துக்கொண்டு உம்மைப் பிரிந்ததனால் விளையும் பெருந் துயரை ஒருவாறு தணித்துக்கொள்ள முயல்வேன்"—என்று கூறி, மாரவேள் சொரிந்த மலர்க்கணைகளைத் தாங்க முடியாமல், திருத்தேரைத் தொடர்ந்து நடந்தாள்.

நீல வண்டின் குறு குறுப்பும் இளம் பெண்மான் விழிகளின் மருட்சியும் நீல மீனின் புரட்சியும் வேலின் கூர்மையும் நஞ்சின் கொடுமையும் அமிர்தத்தின் இனிமையும் ஒருங்கு கலந்து அமைந்தது போன்ற கருவிழிகளை உடைய மற்றொரு பெண்—சுமார் பதினெட்டு வயதுடைய, ஸர்வாவயவ பூர்ண ஸௌந்தர்யவதியாகிய மடந்தை—மாரவேள் தனது லீலைகள் அனைத்துக்கும் தகுந்த கருவியாகப் பயன்படுத்தும் நடுப்பருவமுடைய நங்கை, தனது வீட்டின் பின்புறத்திலுள்ள சிங்காரப் பூந்தோட்டத்திலே, கமுக மரங்களினிடையில் பூட்டப் பெற்றிருந்த பொன்னூசலிலே சிங்காரமாக வீற்றிருந்து, இரு செவிகளிலும் அணிந்த மணி மகர குண்டலங்கள் ஆட ஒய்யாரமாக ஊசலாடிக் கொண்டிருந்தாள். அவ் வேளையில், அங்கு ஓடி வந்த அவளது தோழி அவளை நோக்கி, "நீ ஊசலாடுகிற லட்சணம் வெகு அழகா யிருக்கிறதே! திருவீதியிலே அழகிய நம்பி எவ்வளவு கோலாகலமாகத் திருத்தேரில் ஏறிப் பவனி வருகிறா ரென்பதைக் கண்டு களிக்க நீ வரப்போகிறாயா? இல்லையா?"—என்று வினவினாள். உடனே, ஒரு இளமான் கன்றே போல் ஊசலினின்றும் துள்ளிக் குதித்த அம் மடந்தை, தெருவில் ஓடிவந்து தேரில் காட்சியளித்த நம்பியை நோக்கி 'நெஞ்சு உருகிக் கண் பனிப்பத் துதித்து,' "செந்தாமரைத் திருக்கையிலே வெண் சங்கத்தைப் பற்றி நின்ற அண்ணலே! உம்மையே உன்னி உன்னி உள்ளம் உருகி நிற்கும் எமது சேர்க்கையை நீர் விரும்பாது விலகி நிற்பதன் காரணந்தான் என்ன? நச்சரவத்தைத் தனது கால்களில் பற்றிப் பறந்து திரியும் புள்ளரசாகிய கருடாழ்வாருடன் மகிழ்ந்திருந்தது போல், எங்கள் மதியையும் மகிழ்விக்க வேண்டாமோ?"—என்று வினவி நின்றாள். காமவேள் எவிய ஐம் பூங் கணைகளால் கனன்றெழுந்த காதல் தீயை அடக்க முடியாதவளாய், கரிய குழல் சரிந்து தொங்க—அணிந்த கலை தளர்ந்து நெகிழ—தன்னை மறந்து நின்றாள் அம் மடந்தை. நம்பியின் திருத்தேரோ, நங்கையின் முறையீட்டைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அடுத்த தெருவை அடுத்தது.

வெள்ளை வெளேலென்ற முல்லையரும்புகளை யொத்த முத்துப் பற்களும் செங்குவளை மலரும் வெண்வள்ளை மலரும் ஒரு செந்தாமரைப் பூவிற்குள் அமைந்திருப்பதே போல் செங்கனி வாயிதழ்களையும் கொடிமூக்கையும் தன்னிடம் ஏந்தி நின்ற மலர்முகமும் உடையவளும், காதற் கலவியிலே மேனகையும் வெட்கி நிற்க விசித்திர லீலை புரிய வல்லவளும், தனது ஒரு மோகனப் புன்சிரிப்பினாலே எத்தகையவர்களையும் எளிதில் மயக்கிவிட வல்லவளும், இளம் பெண்மானின் கண்களைப் போல் மருண்டு நோக்கும் கருவிழிகளை உடையவளும், சுமார் இருபத்தைந்து வயதுடையவளுமான ஒரு அரிவை, தனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட வள்ளலாகிய அழகிய நம்பியின் திருவுருவை ஓவியமாகத் தீட்டி மகிழும் ஆவல் மிகுந்து, மாடிமேல் சென்று, அழகிய பொன்னிறப் பலகையின் மேல் எழுதுகோலை காட்டி நம்பியின் திருவுருவைத் தீட்டத் தொடங்கினாள். அவ் வேளையிலே, 'அழகிய நம்பி வந்தார்! குறுங்குடிக் குழகர் வந்தார்!'—என்று வீதியினின்றும் எழுந்த திருச்சின்ன ஒலி அவளது செவிகளில் விழுந்தது. உடனே கீழிறங்கி வந்த அவள், நம்பியைக் கண் குளிரக் கண்டு துதித்து நின்று, "எம்பெருமானே! முன்னர் ஒரு மெல்லியலின் மேனியாகிய கரும்பின்மீது கொண்ட காதற் பெருக்கினாலே, பெரியதொரு வில்லை ஒடித்தீர! அன்று அந் நங்கையின் பொருட்டு அப் பெரு வில்லை ஒடித்தருளிய நீர், இன்று எளியேனை எதிர்த்து நிற்கும் மாரவேளின் கரும்பு வில்லை ஒடித்தருள மனம் இரங்காததன் காரணம் என்னவோ? அன்று கருங்கடலின் செருக்கை அடக்கித் திருவணை கட்டியருளிய நீர் இன்று எனது இரு விழிகளினின்றும் பெருகும் கண்ணீராகிய ஆற்றுப் பெருக்கைத் தடுக்கக் கூடிய அணை கட்டியருள அகம் இரங்கினீரில்லை. அன்று கொக்கு வடிவம் கொண்டு வந்த கொடிய அரக்கனின் வாயை இரு பிளவாகக் கிழித்தருளிய நீர், இன்று எனது நெஞ்சைச் சித்திர வதைக்கு உட்படுத்தும் குயில் அன்றில் முதலிய கருணையற்ற பறவைகளின் வாயைப் பிளந்தருளலாகாதோ?"—என்று முறையிட்டாள். அவளது அம் முறையீட்டைக் கேட்டும் அதைச் சற்றும் பொருட்படுத்தாதவரேபோல், நம்பி அடுத்த தெருவிற் புகுந்தார்.

பிறை மதியணிந்த பெருமானால் நீறுபட்டழிந்து மீண்டும உயிர் பெற்றெழுந்து செங்கரும்பு வில் ஏந்தி மெல்லியர் மேல் கணை தொடுக்கப் பின் வாங்காத வில்லியாகிய மாரவேள், நம்பியின் திருத்தேருகிலே பிறஎவரது கண்களுக்கும் தெரியாத வண்ணம் மாயமாக மறைந்தவாறு நடந்தும் வந்தான். அவ் வேளையிலே, தனது தோழிகளுடன் செந்தாமரைக் குளத்தில் படிந்து குடைந்தாடித் திரும்பிவந்த ஒரு நங்கை, சுமார் முப்பது வயதுடைய தெரிவை, வீதியில் திருத்தேரில் பவனி வந்துகொண்டிருந்த நம்பியைக் கண்டு நின்று, அப் பெருமானை நோக்கி, "எற்கெனவே சங்கு—சக்கரங்களைத் திருக்கைகளில் ஏந்தி நிற்கும் நீர், இன்று எமது வளைகளையும் மோதிரங்களையும் பறித்துக்கொள்ள முயல்வதும் முறைதானோ? என்னிடம் வந்து கலந்திருந்து களிப்பூட்ட மனம் இரங்காவிடினும், உமது திருமார்பில் புரளும் பேறு பெற்ற திருமாலையை அளித்தருளத் திருவுள்ளம் இரங்கினாலும் போதும். உமது வீரத் திருமார்பைத் தழுவி மகிழும் தனிப்பெரும் பேற்றுக்கு உரியவர்கள் திருமகளும் புவி

மகளுமே யாயினும், அம் மார்பில் புரளும் திருத்துழாய் மாலை மெய்யன்பர்கள் அனைவருக்கும் பொதுவானதே யன்றோ? அம் மாலையை நீராகத் தாராவிடில், நானே கை தொட்டுப் பற்றிப் பறித்துக் கொண்டு விடுவேன்"—என்றாள். அவளது வீர வாதத்தைக் கேட்டுப் புன்னகை புரிந்த நம்பி, அடுத்த தெருவில் புகுந்து விட்டார்.

கருமுகில் போன்ற கருங் குழலும் செங்கனிவாயும் வெண் முத்துப் பற்களும் மிக மெல்லிய சிற்றிடையும் பெற்ற சுமார் முப்பத்தைந்து வயதுடைய பேரிளம்பெண் ஒருத்தி, ஒரு திண்ணையில் ஒரு பெரியார் நடத்திக் கொண்டிருந்த பகவத்கீதாப் பிரசங்கத்தில் ஈடுபட்டு மகிழ்ந்திருந்தாள். 'பாடகம்' என்பது நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாதலின், அப் பெயருடைய ஆபரணத்தை அவள் தனது கால்களில் அணிய இணங்கிலள்? 'வளை—ஆழி எந்திய நம்பிக்கு ஒப்பாக, நான் வளைகளையும் கணையாழிகளையும் அணிந்து கொள்ளேன்'—என்று மறுத்து விட்டாள் அவள். வீதியில் திருத்தேரில் ஏறிவந்த நம்பியைக் கண் குளிரக் கண்டு, "எம் பெருமானே! உமது திருமார்பை அடைந்து அழகு மிகுந்து விளங்கும் கௌஸ்துப மணி மீது, எனக்கு ஆசை இல்லை. செஞ்சந்தனச் சாந்தணிந்த உமது திருமார்பிலே புரண்டு நறுமணம் வீசிக் கொண்டிருக்கும் திருத்துழாய் மாலையை அடியேற்கு அளித்தருளத் திருவுள்ளம் இரங்கியருள்வீராயின், அதுவே அடியேற்குப் போதும்."—என்று அப் பெருமானை இரந்து நின்றாள். அவளது அவ் வேண்டுகோளைக் கேட்டும் கேளாதவரே போல், நம்பியும் மறைந்துபோய் விட்டார்.

நம்பி மறைந்து போய்விட்ட பின்னர் சிந்தை பெரிதும் கலங்கித் தள்ளாடித் தள்ளாடி நடந்த வண்ணம் தனது மனைக்கு வந்து சேர்ந்த அப் பேரிளம் பெண், நெஞ்சினின்றும் பொங்கி யெழுந்த கொடிய துயரைப் பொறுக்க முடியாமல் தரையில் மூர்ச்சித்து விழுந்தாள். அவளைக் கண்டு பெரிதும் கலங்கிய அவளது தோழிகள், மெல்லிய பஞ்சணையின் மேல் குளிரிளந் தளிர்களைப் பரப்பி அவற்றின் மேல் வெண்பட்டுத் துணியை விரித்துப் போட்டு. அவளைத் தூக்கிக்கொண்டு வந்து அப் படுக்கையின் மேல் கிடத்தி, சுற்றிலுமிருந்த ஜன்னல்களைத் திறந்து விட்டு, அவள்மீது மெல்லிய மல்லிகை மலர்களைச் சொரிந்து, அவளது கரங்களில் குளிர்ந்த சந்தனச் சாந்து பூசி, அவள் மீது பன்னீரைத் தெளித்து, மயில் விசிறிகளைக் கொண்டு விசிறி நின்றனர். அவ் வேளையிலே, அங்கு வந்து சேர்ந்த அவளது ஆருயிர்த் தோழி, அவளைச் சுற்றிலும் நின்று கொண்டிருந்த அனைவரையும் விலக்கி, அவர்களை நோக்கி, "இவளது உள்ளக் கிடக்கை என்னவென்பதை உணர்ந்து கொள்ளாமல், இவளுக்கு இதம் செய்வதாக எண்ணிக் கொண்டு, இவள் படும் வேதனையையே மேன் மேலும் பெருக்கிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் இவள் மீது தெளித்த பன்னீர், அழகிய நம்பியின் திருவாராதனையிலிருந்த திவ்ய தீர்த்தத்திற்குச் சிறிதேனும் ஈடாகுமோ? இவளது மார்பகத்தில் நீங்கள் வைத்த சந்தனச் சாந்து, திருக்குறுங்குடி அழகிய நம்பியின் திருவடிகளில் கிடக்கும் திருத்துழாய்க்குச் சிறிதேனும் நிகராகுமே? மயில் தோகை விசிறிகளைக் கொண்டு வீசி நீங்கள் எழுப்ப முயலும் இளங்காற்று, நம்பியின் திருக்கோபுர வாசலிலே வீசும் தென்றற் காற்றுக்கு ஒப்பாகக் கூடுமோ? இவள் படும் துயரை நீக்கு

வதற்கு, நீங்கள் செய்து நிற்கும் உபசாரங்களுள் எதுவும் சிறிதும் பயன் படாது; இவற்றையெல்லாம் விட்டுவிட்டு அகன்று செல்லுங்கள்"—என்று கூறி, தலைவியைச் சூழ்ந்து நின்று கொண்டிருந்தவர்களை யெல்லாம் அப்புறப்படுத்திவிட்ட தோழி, அழகிய நம்பியின் ஆலயத்தை அடைந்து, பலவகைப்பட்ட இனிய நய மொழிகளினால் நம்பியின் திருவுள்ளத்தைப் பெரிதும் மகிழ்வித்து, அவரது திருமார்பில் விளங்கிய திருத்துழாய் மாலையைப் பரிசாகப் பெற்றுக்கொண்டு வந்து, தனது சிந்தைக்கினிய செலவியான சுந்தரியின் தோள்களில் சூட்டி மகிழ்ந்து நின்றாள். அத் திருமாலை தனது உடலில் பட்டவுடனே களித்தெழுந்த சுந்தரி, தனது மார்பில் விளங்கிய அத் திருமாலையை ஆராப் பெருங் காதலுடன் அணைத்துக் கொண்டு, வர்ணனைக் கடங்காத மகத்தான ஆனந்தக் கடலில் மூழ்கி விட்டாள்.

—இவ்வாறு, பைங்கிளி கொஞ்சுவது போல் கொஞ்சிக் குளறி மழலை மொழிந்த பேதைப் பெண் முதல், காதல் முதிர்ந்து கருத்து உருகி நின்ற பேரிளம் பெண் வரையில்—எழு வகைப்பட்ட பருவங்களை உடைய மாதர்கள் பலரும் பக்திக் காதல் பெருகிக் கனிந்து உருகி நிற்கும்படி—திருக்குறுங்குடியின் திருவீதிகளிலே, 'நாத விநோத நம்பி'—என்னும் அழகிய நம்பி, தேவர்களெல்லோரும் வியந்து துதிக்க, திருத்தேரின்மேல் ஆரோகணித்து, பலவகைப்பட்ட வைபவங்களுடன் திருவுலாக் காட்சி அளித்தருளினன்.

(இக் கட்டுரையும் இதற்கு முந்திய கட்டுரையும், 'திருக்குறுங்குடி அழகிய நம்பி உலா'—எனும் பழம் பிரபந்தம் ஒன்றை ஆதாரமாகக் கொண்டு எழுதப் பட்டனவாகும்.)

---

# நடுவு நிலைமை

(பு. அ. இரத்தின செட்டியார்.)

நடுவு நிலைமை என்பது என்ன?

நடுவு என்பது, நடு, பொது, மத்தி, மையம், சமம், நீதி, நியாயம், தகுதி எனவும், நிலைமை என்பது சால்பு, இயல்பு, குணம், உறுதி, தன்மை, மேன்மை, எனவும் பொருள்படும்.

எனவே, மக்களாய்ப் பிறந்த நாம் அனைவரும், தத்தமது நிலைமைக் கேற்ப, யாவரிடத்தும் ஒப்ப நடந்து கொள்வதால் உண்டாகும், மேன்மையைப் பற்றிக் கூறுவது என்பது இதன் திரண்ட பொருளாம்.

மக்களாய்ப் பிறந்தார் அனைவரும் கடைத் தேறுவான் வேண்டி, ஆன்றோர்களால் ஆக்கித் தரப்பட்ட எல்லா நல்லறங்களிலும், இது முதன்மை தங்கிய அறமாகும். ஆகவே மேலான அறமாகும். இந் நடு நிலைமையைக் கடைப்பிடியாது எவரும், தாம் தாம் மேற்கொண்ட எத் தொழிலாலும் பயன் பெறுவதில்லை எனலாம். ஆதலால் மற்றெல்லா நல்லறங்களுக்கும் இது தாயகம் போல்வதாம்.

"சாதனையின்றி ஒன்றைச் சாதிப்பார் உலகிலில்லை" என்னும் ஆன்றோர் வாக்கின்படி நடு நிலைமையாகிய சாதனத்தை மேற்கொண்டு ஒழுக வில்லையேல், அதன் சாத்தியமாகிய உயர்நிலை யடைவது ஒருகாலு மில்லையாம். எனவே, இந் நடு நிலைமையைக் கடைப்பிடித்தல் மனிதராகப் பிறந்த அனைவர்க்கும் இன்றியமையாத கடனும். இது பற்றியே 'மிகுதி வேண்டுவோன் தகுதி நண்டான்' என்பது ஆன்றோர் வாக்கு. உலகில் யாரே இந் நடு நிலைமையைக் கைப்பற்ற முடியும்? மேலானதான இந் நடு நிலையைக் கைப்பற்றி உயர் நிலை யடையாமல் மக்கள் ஏன் வறிதே கழிகின்றனர்? எனின்,

இம்மையில் மக்கள் அனைவராலும் போற்றப்படும் சிறப்பையும், மறுமையில் தேவர்களால் போற்றப்படும் சிறப்பையும், இவ் விரு திறத்தினர்களாலும் போற்றப்படும் முத்தியின் சிறப்பையும், ஒருங்கே யடைபவர் மிகச் சிலரேயாக இருத்தலினால்தான், இதைக் கைப்பற்றி ஒழுகுவோரும் மிகச் சிலரேயாக இருக்கின்றனர். இது பற்றியே 'நடுவு நின்றார்க்கன்றி ஞானமுமில்லை' எனத் திருமந்திரங் கூறுகின்றது. ஆகவே இதைக் கடைப்பிடியாது ஒழுகி மேல் நிலை யடைந்தார் யார்? ஒருவரும் இல்லையன்றே! திரிமூர்த்திகளும் தத்தம் தொழில்களாகிய உலக காரியங்களை முறையே நடைபெறுமாறு செய்வதும் இந் நடு நிலையில் அவர்கள் சிறிதும் பிறழாது கடைப் பிடித்ததினால் தான் என்பதை விளக்கவே 'நடுவு

னின்றார் நல்ல நாராணர் ஆவ'ரெனத் திருமந்திரம் தீர்க்கமாக புகலுவதும், தென்திசைக் கடவுளாம் அறக்கடவுளார்க்கு நடுவன் என்ற பெயர் ஏற்பட்டு இருப்பதும் தக்க சான்றாம். திரிமூர்த்திகளின் செய்கையே இவ்விதமெனின் மற்றையர்க்குச் சொல்லவும் வேண்டுமா? ஆகவே நல்லன வென்பன யாவையும், நடுவு நிலைமை யுடையார்க்கே உண்டாம் அன்றி ஏனையோர்க்கு மற்ற எவ்விதத்தாலும் சாத்தியமாவதில்லை என்பது வெள்ளிடைமலையாம்.

இதனை இறைவனால் ஆக்கிய உலக அமைப்பினால் நன்கு அறியலாம். இவ்வமைப்பு இயற்கை செயற்கையென இருவகைத்தாம்.

## இயற்கை.

1, சூரியன். மற்ற அண்டங்களின் மத்தியில் சூரியன் நிலைத்து நிற்கின்றதென்றும், ஆக்கிரண சக்தியால் ஒன்றையொன்று இழுத்து நிற்பதால் உலக காரியம் செவ்வனே நடைபெறுகின்றனவென்றும், விஞ்ஞான நூல் வல்லார் கூறுகின்றனர். மொழிநூல் இலக்கணவியல் 155 பக்கம். சுள், சூரியன், சுண்டு என்னும் ஆராய்ச்சியைக் கவனிக்கின் நன்கு விளங்கும்.

2. முளைகள். வித்தினின்று முளைக்கும் சக்தியானது நடுப்பாகத்திலேயே அமைந்துளது என்பது விவசாயிகளையும், விவசாய ஆராய்ச்சியாளர்களையும், விசாரிக்கின் நன்கு புலனாகும்.

3. குருத்துக்கள். மரம், செடி, கொடிகளின் மத்திய பாகத்திலேயே குருத்துக்கள் அமைந்துளதென்பதும் அறியாதார் யார்?

4. கருக்கள். சரீர மத்திய பாகத்திலேயே, கருப்பை அமைந்துளது என்பது, வாசகர்கள் அனைவருக்கும் தெரிந்த விஷயமே.

5. தில்லை. உலக அமைப்பின் மத்திய பாகத்தில் திருத்தில்லை அமைந்திருப்பதால் விராட்புருடன் இருதய ஸ்தானமெனவும், பொதுவெனவும், அங்கு வீற்றிருக்கின்ற எம்பெருமானுக்கு, நடு+ஈசன். நடேசன் எனத் திருப்பெயர் அமைந்திருப்பதாலும், நால்வராதிகளும் மற்றெல்லாத் தலங்களிலும் சிறப்பித்துப் பாசுரங்கள் அதிகமாக பாடியுள்ளார்கள் எனவும் பிற மதஸ்தரான ஜெயிமினி முனிவரும் இத்திருத்தல மடைந்த காலத்து தன்னையும் அறியாமல் 'பகாஸ்தவம்' என்னும் நூலைப் பாடியுள்ளார் எனவும் தெரியவருவதால் இந்நடுநிலைமையின் மேன்மை நன்கு விளங்கும்.

## செயற்கை

1. கலாசாலை மாணவர்களை ஒருங்கு அமைத்து ஆசிரியன் மத்தியில் அமர்ந்து எல்லா மாணவர்களையும் ஒரே நோக்காக நோக்கி, அறிவூட்டும் தன்மையின் மேன்மையை யறிந்து அமைத்துள்ள கலாசாலைகளின் அமைப்புக் கிரமத்தையும்;

2. நீதிமன்றம் நியாயாதிபதி நியாய பரிபாலனம் செய்யுங்கால், நியாய வாதிகள் தம்மைச்சூழ கட்சிப் பிரதிகட்சிகளை யொருங்கே விசாரித்து நீதி வழங்கவேண்டு மென்பதைத் தீர்க்க யோசித்து அமைத்த நியாயசபைகளின் செயற்கை யமைப்பையும்,

3, தொழில் வண்டிகளின் சக்கரத்தின் மத்தியில் அச்சும் அதன்மேல் நின்று மற்றச் சாமான்களைத் தாங்கும் கட்டைக்கு மையக்கட்டை யென்னும் சிறப்புப் பெயரையும், மையத்தாணியையும், சீர்பெற அமைத்தலால் தொழில்கள் செவ்வனே நடைபெற ஏதுவாக இருக்கும் என ஆன்றோர் கள் அறிவால் அமைத்துள்ள அரும்பெரும் செயலையும்;

4. வாணிபம் துலாக்கோலின் சக்தியினால் உலக வர்த்தகத்துறை எவ்வளவு முன்னேறி நடக்கவும், பலப்பல தேயத்தினரும் நாணயமாகவே நடந்து கொள்ளுவதற்கு ஏற்றதாகவும், சமன்செய்து சீர்தூக்கும் கோல் எனச் சிறப்புடன் அமைந்துள்ள துலாக்கோலின் தன்மையையும் ஆராய்ந்து யோசிக்குங்கால்,

இயற்கை செயற்கை யெவையும் நடுவு நிலைமையாலேயே நடைபெறு கின்றன என்பது வெள்ளிடைமலை.

ஆகவே நாம் ஒவ்வொருவரும் இதனைக் கைப்பற்றுவதால் உண்டா கும் நன்மைக்கு எல்லையில்லை என்பது பெறப்பட்டது.

இதுபற்றியே திருக்குறளாசிரியரும் 'தகுதியெனா ஒன்று நன்றே' என் றார். நடுவு நிலைமையானதொன்றே போதுமானது. இதற்கு மேலானது, ஒன்றுமீண்டும் யாண்டுமிலையெனும் கருத்தே அவர் அங்ஙனம் கூறினதற்கு காரணமன்றோ?

நடுவு நிலைமைக்கு வேறான வழியால் மனிதனுக்கு எல்லாவித மேன் மையும் உண்டாவதாய் இருந்தால் அதை ஏன் கைப்பற்றக்கூடாது? என உண்டாகும் ஐயத்தை நீக்கவே, 'நன்றேதரினும் நடுவிகந்தா மாக்கத்தை யன்றே யொழியவிடல்' என வலியுறுத்திக் கூறியுள்ளார். தவிர இந்நடு நிலையை நாயனார் இல்லறவியலில், ஒரு அதிகாரமாகக் கூறி யிருப்பதாலும் 'செப்பமுடையானாக்கம் சிதைவின்றி எச்சத்திற்கு ஏமாப்புடைத்து' எனக் கூறி யிருப்பதாலும் இது இல்லறத்தார்க்கே உரியது என ஒரு சாராரும்,

நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற்கு உரை காணுங்கால் மெய்ப் பாட்டியல் ஆங்கவையொருபால் எனும் சூத்திரவுரையில் 'சமநிலை என்பது செஞ்சாந்தெறியினும் செத்தினும் போழ்தினும் நெஞ்சமோடா நிலை' என் றும் இது காமம், வெகுளி, மயக்கம் என முக்குற்றம் நீங்கிய துறந்தார்க் கன்றி மற்றையரிடத்து நிகழாதென்றும் கூறியுளதால், இது துறவறத் தார்க்கே யுரியது என்றும் சிலர் கூறுகின்றனர். பின் போம்வழி யாது எனின்? இல்லறத்தார்க்குரிய நடுநிலை நிற்காத ஒருவன் எங்ஙனம் துறவற நடுநிலை யெய்தமுடியும்? இல்லற நடுநிலையை யெய்தாதான் துறவற நடு நிலை நிற்றற்கு, அருகனாவான் என்பதோ? மேலும் ஒருவன் இல்லறத்திற்கு உரிய நடுநிலைமையைக் கைப்பற்றி ஒழுகுவானாயின் அதன் பலனாகிய பொருள் பூஜை முதலியவற்றை இம்மையிலேயே பெறுவதோடு மறுமைக்குரிய துற வற நடுவு நிலைமையையும், கைப்பற்ற மலப்பரிபாக வசத்தால், அருகனாவ துடன் அதைக் கைப்பற்றி ஒழுகுவதால் தேவரால் போற்றப்படும் புகழை யும் அடைந்து அதன்வாயிலாக முக்தி யின்பத்தையும் அடைகுவன் என்ப தாம். ஆகவே இல்லற, துறவறம் என இரண்டிற்கும் அது உரியதாம்

இனி இல்லறத்தார்க்குரிய நடுநிலை யெதுவென வாராயின், "தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற், பாற்பட் டொழுகப் பெறின்" எனும் குறளுக்கு பரிமேலழகர் உரை காணுங்கால் பகை, நொதுமல் நண்பு, என்னும் பகுதியால் முறைமைவிடாது ஒழுகப்பெறின் நடுவு நிலைமையாகிய ஓர் அறமே நல்லதெனக் கூறியுள்ளார் அதை யாய்ந்து ஆராயின் இல்லறத்தான் பகை எனவும், சுற்றத்தான் எனவும், நண்பனெனவும் பாரபட்சமின்றி நடந்து கொள்வதே இல்லறத்தார்க்குரிய நடுவுநிலை. அப்படி நடந்துகொண்டு மேன்மையை யடைந்தவர்களில் சிலரைப் பற்றி ஆராய்வோம்.

தர்ம சாஸ்திரம் எழுதிய மநுவின்மீதும் பின்னுள்ளார்கள் ஒரு குலத்துக்கொரு நீதி எனக் குற்றம் கூறினும் தன்மேல் சிறிதளவும் எந்தக் காலத்திலும் குறைகூறாவண்ணம் செங்கோலோச்சி வரும் மநுச்சோழன், தன்னுடைய சபையின்கண் வீற்றிருக்கின்ற காலத்திலே திடீரென்று மணியோசை கேட்கப்படுகின்றது. அரசன் இடியுண்ட நாகம்போல் அயர்ச்சியடைகின்றனன். ஏன் அடையவேண்டும்? தான் அரசாட்சி ஏற்குங்கால் குறையுள்ளவர்கள் தன்னிடம் முறையிட வாயிலின்கண் மணியொன்றைக் கட்டுவித்து குறையுள்ளவர்கள் அம்மணி யடித்தார்களானால் அச்சத்தங் கேட்டவுடன் தான் நேரில் சென்று, அவர்கள் குறைகளைப் பரிசீலிப்பதுமான வழக்கத்தைக் கொண்டிருந்தனன்.

ஆனால் அவன் அரசாட்சியில் குறையுள்ளார் ஒருவரும் இலாகவே அம்மணி, அவன் உத்தேசத்திற்கு, உதவாமலே இருந்தது. இன்று அச்சத்தம் திடீரெனக் கேட்டவுடன், தன் அரசாட்சியில் யார் எப்படிப்பட்ட இடுக்கணில் அகப்பட்டனர்களோ? எங்ஙனம் துயர் உறுகின்றனரோ! என்று பதைபதைத்தவனாகி அவர்களின் குறையைத் தீர்க்கவேண்டும் என்றதீவிரமுடையவனாகி சேவினுடைய அழுகுரல் கேட்டோடும் தாயொப்பவிரைந்து வாயிலுக்கோடினான். அங்கு கண்ணீர் ஆறாகப் பெருகவிட்டுக் கதறிக்கொண்டிருக்கும் தலையீற்றுப் பசுவைக் கண்டு, ஒன்றும் தோன்றாதவனாகி, 'இத்தாய்ப் பசுவிற்கு என்ன தீங்கு நேரிட்டதோ, இங்கறிந்தார் உளராயின், சீக்கிரம் கூறுங்கள்' என்று, தன்னுடன் நின்ற மந்திரிகளை வினவுதலும், அவர்கள் 'அரசரேறே! தங்கள் செல்வத் திருக்குமரன் ஆலயதரிசனம் செய்வான் வேண்டி ரதாரூடனாகச் செல்லுங் காலத்தில், அகஸ்மாத்தாக இப்பசுவின் கன்றானது, தேர்ச் சக்கரத்தில் அகப்பட்டு, உயிர் துறந்தது. அதனால் இது இப்படி துக்கத்தை யடைகிறது' என தெரிவிக்க அரசனானவன் மணி சப்தங் கேட்ட அந்த காலத்திலேயே பெரிதாகிய துயரத்தை யடைந்தவன் தனது மைந்தனே அவ்வித குற்றத்திற்கு ஆளாகி வாயற்ற பிராணியாகிய ஒரு பசுவிற்கு துயரிழைத்தான் என்பதைக் கேட்குங்கால் எவ்விதத் துன்பத்தை யடைந்திருப்பான்? என்பது நேயர்களே ஆய்ந்துயோசிக்கத் தெரியவரும். சோகமடைந்த வரசனை மந்திரிகள் ஒருவாறு தேற்றலாமென நினைத்து, 'அரசர் கோவே! தமது புத்திரன் வேண்டுமென்று, இந்த பசுவிற்குத் துயரை இழைக்கவில்லை. சாக்கிரதையாக பல்லார் புடைசூழ சென்றுகொண்டிருக்குங் காலத்தில் மாயமாகவல்லவா அக்கன்று தேர்ச் சக்கரத்தில் அகப்பட்டு உயிர்துறந்து இருக்கிறது. இதை யோசிக்குங்கால் இக்கன்றினுடைய ஆயுள், அற்பமென்று சொல்லவேண்டிய நிலைமையில் இருக்

கிறோம். ஆதலால், மைந்தனுக்கு ஏதாவது பிராயச்சித்தம் செய்து மேல் நடக்க வேண்டியவைகளைக் கவனிக்கவேண்டியதை விட்டு வீணில், சோகிப்பதில் என்ன பிரயோசனம்' எனக் கூறினர், அரசன் மந்திரிகளை உறுத்துப் பார்த்து, 'நீங்கள் சொன்ன நியாயம் வெகு நேர்த்தியாக இருக்கிறது. மைந்தனுக்கு பிராயச்சித்தம் செய்துவிட்டால் கன்று உயிர்பெற்று எழுந்துவிடுமா? அல்லது பசுவின துக்கமாவது ஆறிவிடுமா? ஒரு உயிரை உண்டுபண்ண முடியாதவன், ஒரு உயிரைக் கொல்லல் எங்ஙனம் நியாயம். ஆதலால் அவ்விதம் கொலை செய்தவனைப் பதில் கொலை செய்தலே நியாயம் என்று தீர்மானமாக உரைத்தான். மந்திரிகள் துணுக்குற்றவர்களாகி, மன்னர் பெருந்தகையே ஐயறிவுடைய உயிர்க்காக ஆறறிவுடைய உயிரைக் கோறல் நீதியன்று. வேதாகமங்களில் 'ஆன்மாக்கள் உயர்வு தாழ்வு பற்றி புண்ணிய பாவங்கள் ஏறியும் குறைந்தும் இருக்கும் எனக் கூறப்பட்டிருக்கிறது. அதுவுமன்றி நேரிடுங் கொலையானது எவ்வாறு நடந்ததெனக் கவனித்து தண்டிக்கவேண்டுமல்லது எல்லாம் ஒன்றாக மதித்து தண்டித்தல் நீதியாகாது. ஒருவன் ஒருவனை நல்வழியில் நிறுத்தும்பொருட்டு அச்சுறுத்தி தண்டிக்கும்போது (அமிர்த மூட்ட நஞ்சாக முடிந்தது போல்) அபாயம் நேர்ந்தால் அவ்விதக் கொலைக்கு உபவாசம் முதலியவைகளால் பரிகாரம் தேட வேண்டுமென்றும், (காக்கை உட்கார பனம்பழம் விழுதல் போல்) வலிமை பகைமை யின்றி, விதி வசத்தால் ஒரு கொலை நேரிடில் இனி அவ்விதம் நேரிடாமல் இருப்பதற்காக தண்டித்து அச்சுறுத்தலும்) காமக் குரோதாதிகளால் (ஆனை மதப்பட்டு அடவி அழித்ததைப் போல், ஒருவரை யொருவர் கொலை செய்யின் அக் கொலைக்கு ஈடாகக் கொலை செய்யவேண்டும் என ஆன்றோர்கள் வகுத்துள்ளார்கள். ஆகவே தாங்கள் பெரிதும் யோசித்து, செய்வீராக எனப் பிரார்த்தித்த மந்திரிகளை நோக்கி மந்திரிகாள்! ஆன்மாக்கள் உயர்வு தாழ்வு பற்றி புண்ணிய பாவங்கள் ஏறியும் குறைந்தும் இருக்குமென வேதத்தின் பூர்வ பாகத்தில் சொல்லி இருந்தாலும், உத்தர பாகத்தில் ஈஸ்வர சந்நிதியில் எல்லா வுயிர்களும் சமம், என்னும் விதிக்கு, நீங்கள் என்ன பதில் சொல்லுகிறீர்கள்! தவிரவும் எனது மைந்தன் அமுத மூட்டப்போய் நஞ்சானதுபோல் பசுவின் கன்றுக்கு நன்மை செய்யப்போய் அது தீமையாக முடியவில்லை. காக்கை உட்கார பனம்பழம் விழும் நியாயம் போல், எதிர்ப்பாரா விதமாகவும், இக்கொலை நேரிடவில்லை. ஏனெனில் ஆலய தரிசனத்திற்காகச் செல்பவன் ரதத்தின் மீதுதான் செல்லவேண்டுமா? ஆதலால் யானை மதப்பட்டு அடவி அழித்ததுபோல், மதத்தினாலேயே அக்கன்றை கொலை செய்தான். மேலும் ஐயறிவுயிர்க்காக ஆறறிவுள்ள வுயிரைக் கொல்லல் நீதியாகாது என்கிறீர்கள். ஆறறிவுள்ள மனிதர்களில் சாமானியர்கள் இம் மணி அடித்தால் அரசனைக் காணலாம் என்று தெரியாதிருக்கும்போது, இப் பசு தெரிந்து மணியடித்தது என்றால் இப் பசுவை ஐயறிவுள்ளதென்று சொல்வதா? ஆறறிவுள்ளதென்று சொல்வதா? பலபல சொல்வானேன்? இக் கன்றின் கொலைக்கீடாக மைந்தனைக் கொலை செய்தலே தகுதி யென வுரைத்து, முதல் மந்திரியை விளித்து நீர் சென்று எவ்வீதியில் என் மைந்தனால் எங்கு இக்கொலை நிகழ்ந்ததோ அதே வீதியில் அவனைக் கிடத்தி, தேரூர்ந்து அவனைக் கொலை செய்வீராக எனக் கட்டளை யிட்டனுப்பினான். சென்ற மந்திரியானவன், அவ்வாறு செய்யாமல் தானே தற்கொலை செய்துகொண்

இறந்தான். இதைக் கேள்வியுற்று, அரசன், துயரங்கொண்டு கன்றின் கொலைக்காக மைந்தனைத் தானே கொலை செய்யவும், முன்னே தானே அவ்வேலையை யேற்றுக்கொண்டிருந்தால் மந்திரி இறக்கமாட்டான் அன்றோ ஆதலால் அக் கொலைக் கீடாக தான் கொலையுண் டிறக்கவும் உறுதி யுடையவனாகி மைந்தனை வீதியிற் கிடத்தித் தான் தேரில் ஆரோக்கணித்து யாதொரு சலனமுமின்றி, மைந்தன்மீது தேரைச் செலுத்தி, கன்றானது எவ்விதம் ரதத்தின் சக்கரத்தில உயிர்துறந்ததோ அவ்விதம் உயிர் துறக்கச் செய்தான் என்றால், அரசனுடைய நீதி வழுவாநெறியை என்னென்பது? (இந்தச் சரித்திர விரிவை இராமலிங்க சுவாமிகள் எழுதிய மநுமுறை கண்ட வாசகத்தில் விரிவாகக் காணலாம்.)

"ஒருமைந்தன் தன் குலத்துக்குள்ளான் என்பது முணரான்
தருமந்தன் வழிச்செல்லக் கடனென்று தன் மைந்தன்
மருமந்தன் தோராழியுற வூர்ந்தான் மநுவேந்தன்
அருமந்த வரசாட்சி யரிதோமற் றெளிதோதான்."

என பெரிய புராணத்தின்கண் ஸ்ரீ சேக்கிழார்பெருமான் வியந்து உரைக்கும் பான்மையைக் கவனிக்குங்கால் உன்னுந்தோறும் பெருமிதம் உண்டாக்கும். மநுச்சோழனுக்கு நிகரான அரசாட்சியும் எந்தக் காலத்திலும் காணவும் நினைக்கவும் முடியாத தன்மையல்லவா? இதைப்பற்றி ஆசிரியர் இளங்கோவடிகள் போற்றி யுரைக்கும் பான்மையை சிலப்பதிகாரத்தில் அனேக விடங்களில் பரக்கக் காணலாம். தன் கணவன் அரசன் கொடுங்கோலால் கொலையுண்டான் எனக் கேள்வியுற்ற கண்ணகியானவள் அடங்காத் துயரத்தோடும் ஆற்றொணு கோபத்தோடும் அரசனை யணுகிய காலத்து 'நீ யார் என' வினவிய அரசனை நோக்கி, ஆராயாது கொடுந்தொழிலை இயற்றிய மன்னன் மனம் மறுகும் வண்ணம் சொல்லும் பான்மையைக் கவனியுங்கள்.

"வாயிற் கடைமணி நடுநா நடுங்க,
ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சு சுடத்தான்தன்
அரும் பெரும் புதல்வனை யாழியிற் மடுத்தோன்
பெரும் பெயர் புகார்ப்பதியே யவ்வூர்"

என மநுவின் அரசாட்சியை வியந்து கூறும் இளங்கோவடிகளின் மனப்பான்மையை யுன்னுந்தோறும், மனதிற்கு இன்ப மூட்டக்கூடிய தன்றோ!

இத் தன்மைவாய்ந்த மன்னர் பெருமானை மநுச்சோழனுக்கு இறைவன் காட்சியளித்து மைந்தனையும், அமைச்சனையும், பசுவின் கன்றையும், எழுப்பித் தந்து ஆட்கொண்டான் என்பதில் வியப்பென்ன இருக்கிறது?

இஃதன்றி, பாரதகதிலும், தருமபுத்திரனது அரசாட்சியைக் கூர்ந்து நோக்குங்கால், இந்நடுவு நிலைமை வழாத தன்மையை நன்கு காணலாம்.

தருமபுத்திரன் ராஜசூயயாகம் செய்த காலத்தில், யாகசாலை சுத்தத்திற்காக, புருஷா மிருகத்தை யழைத்துவர வேண்டுமென யோசித்த காலத்து, வீமனைத்தான் அப்புருஷாமிருகத்தை வருவிக்க அனுப்பப்பட வேண்டு

மென்று கட்டளை யிடப்படுகிறது. கண்ணபிரான் அக்காலத்தில் மூன்று குளிகைகளைத் தந்து ஆபத்து நேரில், உபயோகப்படுத்திக் கொள்ளும்படி, தந்தனுப்ப பெற்றுக்கொண்டு வீமன் சென்று புருஷா மிருகத்தைக் கண்டு தான் வந்த காரியத்தைத் தெரிவித்ததின்மேல், புருஷா மிருகமும் வருவ தாக ஒப்புக்கொண்டு ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டது. அதாவது வீமன் முன்னால் விரைந்து செல்வதென்றும் பின்னால் புருஷாமிருகம் சென்று, நகர எல்லையை யடைவதின் முன் வீமனைப் பிடித்துக்கொண்டால், வீமன் தனக் கிரையாக வேண்டுமென்பதே அவ்வொப்பந்தம். வீமன் வேகமாகப் புறப்பட்டான். புருஷா மிருகம் வேகமாகச் சென்று வீமனைப்பற்றும் சமயத்தில், கண்ணபிரானால் தப்பட்ட குளிகையை வீசவும், அங்கு, ஒரு சிவாலயம் தோற்றப்படுகிறது. ஆலயத்தைக் கண்டவுடன் ஆகமவிதி தவறாது சிவபூஜை செய்யும் குணமுள்ள தாகையால் அல்லவா எல்லா உலகத்தாரிலும் போற்றும் தன்மையும் தனித்தன்மையும், அப் புருஷா மிருகத்திற்கு உண்டாகி இருக்கிறது? ஆகவே, ஆகமவிதிப்படி பூஜை செய்து விட்டு வீமனைத் தொடர்கிறது. வீமன் இவ்விதமே மூன்று குளிகைகளால் காப்பாற்றப்படுகிறான். கடைசியில் வீமன் நகர் எல்லையில் இடக்காலை, இடப் பாகத்தை வைத்த தருணம் புருஷாமிருகம் பற்றிக்கொண்டது. வீமன் நகர் எல்லையில் ஒருகால் வைத்து விட்டபடியால், தான் ஜெயித்ததாகவும், புருஷா மிருகம், ஒருகால் தன் எல்லையிலிருந்தபடியினால், வீமன் சரீரத்தில் பாதி தனக்குச் சொந்தமென்றும் வழக்காடி அரசவையில் சென்று அரசனை தருமபுத்திரன் முன்னின்று, தங்கள் வழக்குகளைத் தெரிவித்துக் கொண்டார்கள். அதன்மேல் தருமபுத்திரர் வீமனை நோக்கி, 'நீ இடது காலை நகர எல்லைக்குள் வைத்திராமல் வலது காலை வைத்திருக்கும் பட்சத்தில் உன் கட்சிபடி புருஷா மிருகத்தை நீ வென்றவனாகிறாய். ஏனெனில் வலதுபாகம் புருஷபாகமாகவும் இடது பாகம் ஸ்திரி பாகமாகவும் சாஸ்திரங்களாலும், ஆன்றோர்களாலும் கூறப்படுகிறது. வலப்பாகம் எந்த எல்லையில் இருக்கிறதோ, அதே இடத்தில் அவனுடைய சரீரம் முழுதும் இருப்பதாக கொள்ளவேண்டிய நியாயப்படி உன் சரீரம் முழுதும் புருஷா மிருகத்திற்குச் சொந்தமாகிறது' எனத் தீர்ப்பளித்தான் எனில், அவன் அரசாட்சியின் நடுநிலை வழாத்தன்மையை, என் என்பது

ஒப்பற்ற பலாட்டியனும், தன் சுகம் கருதாது சகோதரர்களுக்காக உழைக்கும் பெருமிதம் வாய்ந்தவனுமான ஒரு பீமனை இழக்கவும், தயாராகிறார். இந்த வீமனனவன் சகோதரனை தருமபுத்திரனுக்காக எப்படிப்பட்ட தியாகத்தைச் செய்திருக்கின்றான். இயமகம் செய்து முடியவும், தர்மன் 'சம்ராட்' என்னும் பட்டம் உலகத்தாரால் பெறவும், எல்லா இன்பத்திற்கும் மேலான இல்லற வின்பத்தையும், தியாகம் செய்கிறான். எவ்வாறெனின், யாக ஆரம்ப காலத்தில், வியாசமுனிவர் எழுந்தருளி வீமன் முதலிய நால்வரையு மழைத்து,

"மைந்தர்காள் நீவிர் இம்மகஞ் செய்வேந்தனே
தந்தையும் தாயும்இத் தருமவல்லியே
இந்தவான் பிறப்பினுக் கிற்றைநாள் முதல்
குந்தியும் பாண்டுவுமென்று கொள்மினே."

எனக் கட்டளை இடுகிறார்.

முன்னே பாஞ்சாலியை மணந்தகாலத்து நாரதர் எழுந்தருளி சுந்தன் உபசுந்தன் என்கிறவர்களின் சரிதத்தைத் தெரிவித்து, ஒரு வருஷம், முறையாக பத்தினியாக அடையவேண்டுமெனக் கட்டளையிட்டு அதன்படி ஒழுகிவந்து கொண்டிருந்த இவர்களுக்கு, வியாசரால், இவ்விதமான கட்டளை யிடப்படுகிறது.

'மைந்தர்காள் நிவிர்இம் மகஞ் செய்வேந்தனே
தந்தையும், தாயும்இத் தரு மவல்லியே'

என்பதோடு நின்றிருந்தால் மக முடியும் வரையில் அவ்வித எண்ணத்தோடு இருக்கலாமெனக் கொள்ளலாம். பின்னிரண்டடியில்,

'இந்தவான் பிறப்பினுக் கிற்றைநாள் முதல்
குந்தியும் பாண்டுவுமென்று கொள்மினே'

என்று கட்டளை யிடப்படுவதும், அது ஏற்றுக்கொள்ளப்படுவதும், இச்சோதரர்களின் துறந்த மனத்தின் தூய்மையை யல்லவா காட்டுகிறது? மற்ற மூவருக்கும் வழி காட்டியாக வல்லவா பீமன் முன்னணியில் நிற்கிறான். சகோதரன் மகம் முடித்தலுக்காக தன் இல்லற வின்பத்தையும் விடுத்து, இல்லத்துறவு பூண்டவனை இவ் வீமனைத் துறக்கவும், தருமர் தயாராகிறார் என்றால், அவருடைய பாரபட்சமற்ற, தன்மையை எங்ஙனம் வரையறை யிட்டுக் கூறுவது? இது மட்டுமா! தருமன் தன் தம்பியை யிழக்கும் தியாக மட்டிலுமா? செய்யச் சம்மதிக்கிறான். தன்னை யிழக்கவும் சம்மதிக்கிறான். ஏனெனில் இந்த ஐவரில் ஒருவரொழிய மற்றவர் உயிர்வாழ மாட்டார்கள். எங்ஙனமெனில்,

கிருஷ்ண பரமாத்மா தூது சென்ற காலத்து குந்தியினிடம் சென்று 'கர்னன் உனது புத்திரன். அவனை அவனது சகோதரர்களிடம் சேர்ப்பதோ அல்லது அர்ச்சுனன்மேல், நாகக்கணையை மறுமுறை தொடா வண்ணம் செய்வதோ இரண்டில் ஒன்று செய்' என, குந்தியானவள் 'இருவரும் எனது மக்களே இருவரில் யாரை இறக்க யான் சம்மதிப்பது' என சோகித்தகாலத்து பரமாத்மா,

"பைவருந் தலைகளைந்து படைத்த பங்கமேபோல
ஐவரும் மடிதல் நன்றோ அங்கோன் மடிதல் நன்றோ
உய்வரும் சமரில்ஆவி ஒருவர்போய் ஒருவர் உய்யார்
நைவரு துயரமாறி நடப்பதே கருமமென்றான்."

என்று தெரிவிப்பதால், வீமனைத் தியாகம் செய்ய சம்மதித்த தருமன் தன்னைத் தியாகிக்கவும் தயாராகிறான். இதுவுமன்றி, சுயோதனனானவன், யுத்த ஆரம்ப காலத்திலே, சகாதேவனை யடைந்து நாள்கேட்டு சென்றான் என்பதை யறிந்த பரமாத்மா தருமபுத்திரனிடம் வாது வைரத்தை ராவி மதிப்பிடுவதுபோல், சோதிக்கிறார். 'என்ன ஐயா தருமபுத்திரரே! உமக்காக நான் படும்பாடு ஒருபக்க மிருக்க, அனேக மன்னர்கள் தங்கள் எழக்குரோணி சேனையோடுகூட துறப்பதற்காக இங்கே யுத்தத்திற்குப் பக்கத்துணையாக வந்துள்ளார்கள். உமது சகோதரன் சகாதேவன் துரியோதனனுக்கு, நக்காள் குறிப்பிட்டனுப்பி யிருக்கிறான்' என வருத்தப்படுகிறார்.

தருமபுத்திரர் சகதேவனை யழைத்து 'அப்பா கிருஷ்ண பரமாத்மா சொல்வது வாஸ்தவம்தானா!' எனவும், சகதேவன் 'ஆம், அண்ணா நேற்று மாலை சுயோதனன் என்னிடம் வந்து தன செங்கோல் நீடு வாழவும், தரும புத்திரன் முடி வீழவும் செய்வதான ஒரு நன்னாளைப் பார்த்து தான் யுத்தாரம்பம் செய்வதற்காக அளிக்கும்படி கேட்டான். அவ்விதமே நாளிட்டு தந்தேன்' எனலும், தருமபுத்திரர் அப்பா அப்படி நீ இட்டுத் தந்த நாளானது, உத்தேசப் பலனைக் கொடுக்குமா ?என்று வினவலும், 'ஆம் அண்ணா, சாஸ்திரம் உண்மையாக இருக்கும் பட்சத்தில் அதில் நான் வைத்த நம்பகம் உண்மையெனும் பட்சத்திலும் அந்த நாளில், அவன் யுத்த முகூர்த்தம் செய்யும்பட்சத்திலும், அவ்விதம் நடக்கும் என்பது திண்ணம்' என்று கூறிய சகாதேவனை அளவிறந்த ஆர்வத்தோடு தழுவி 'அப்பா இன்றுதான் நீ உண்மைத் தம்பி யாயினை' எனக் கூறி விம்மிதமடைந்தனன் எனில் தரும புத்திரனுடைய நடுநிலை வழாத தன்மை சிறியதன்றே! பரமாத்மா வேண்டிய சூழ்ச்சிகளைச் செய்து அம்முகூர்த்த காலம் அவனுக்குச் சித்திக்கா வண்ணம் செய்து வெற்றியை இவர்கள் பக்க முண்டாக்கினன் என்றால் அவன் கடமையைத்தான் செய்தான் என்று சொல்லவேண்டும்.



# அன்பு

(எம். நல்லப்பன்)

அன்பு எனப்படுவது மானிடர் எல்லாரிடத்தும் விளங்கும் சர்வ சக்திகளுள் மேலானதொன்ருகும். அன்பு இல்லாவிடின், கடவுள் பக்தி, இல்வாழ்க்கை, அறவாழ்க்கை, சமூக வாழ்க்கை முதலிய பல்வேறு அன்பின் உருணிகளும் அறவே யொழிந்து, மானிட வாழ்க்கையே மாறுபட்டு நிற்கும். இவ்வன்பானது மக்களுள் மட்டுமின்றி, மாக்களுள்ளும், புட்களுள்ளும்கூட பொலிகிறது. இவ்வன்பு மானிட வாழ்க்கையுள் எவ்வெவ்விதம் பிரவர்த்திக்கின்றது என்பதை சற்றே ஆராய்வோம்.

மனிதன் கடவுளிடத்தில் காட்டும் அன்பு பக்தி எனப்படும். இது மற்றெல்லாவற்றையும்விட மேலானதும், இதர ஜீவராசிகளிடத்து அன்பு காட்ட அடிப்படையாகவும் விளங்குகிறது. கடவுள் பக்தி உள்ளவனிடத்தில் அன்பு எனப்படுவது கெதேசமாய் விளங்கும். தெய்வத்தினிடத்தில் அன்புள்ளவன் இதர ஜீவன்களிடத்து அன்புள்ளவனுய் விளங்குவான் என்பதினுல் இவ்வன்பு உண்மையில் தெய்வத் தன்மைவாய்ந்த ஓர் சக்தியாகும். தன்னையும் இதர ஜீவ கோடிகளையும் படைத்த கடவுளிடத்தே அன்பினுல் மேதை, மரியாதை, வணக்கம் முதலியவை காட்டுவதே அவரின் பேருபகாரத்திற்குக் கைம்மாருகும்.

ஜன சமூகத்தில் தனிப்படில் சிநேகமென்றும் பொதுப்படில் சகோதரத்துவம் அல்லது ஜன சமூக வாஞ்சை எனவும் படும். மனிதன் ஓர் தனித்து வாழும் ஜீவனல்ல. எம்பிரான் அவனைப் படைத்த காலத்திலேயே இவ் வுணர்ச்சியைக் கொடுத்திருக்கின்றமையின் அவன் பலரோடும் சேர்ந்து வாழும் சிறந்த குணமுடையவனுக விளங்குகிருன். இதனுல் பொது மக்கட்காக தேசாபிமானம் பூண்டு, தேசத்தாரின் முன்னேற்றத்தைக் கோரி பல்வேறு துன்பங்களையும் சந்தோஷமாய் ஏற்றுக்கொள்ளுகிருன். இவ் விஷயத்தில் நம் தேசத்திற்காக உழைக்கும் மகாத்மாகாந்தி அவர்கள் ஓர் திருஷ்டாந்தமாகும்.

இல்வாழ்க்கையில் சதிபதிகளிடத்து விளங்கும் அன்பு காதல் என அழைக்கப்படும். இதனுலேயே அன்னவரை காதலன், காதலி என அழைக்கின்ருேம். காதலன் தன் அன்பால் தன் மனைவி மக்களை நேசித்து அவர்களின் சுக துக்கங்களைத் தன்னுடையதே போல் பாவித்து அவர்களைப் பல விதத்திலும் துன்புருமல் காக்கிருன்.

மக்கள் இதர ஜீவராசிகளிடம் காட்டும் அன்பே ஜீவகாருண்யமாம். ஜீவராசிகளிடத்தில் பாமர ஜனங்கள் நிகழ்த்தும் பாதகச் செயல்கள் ஜீவகாருண்ய முடையாரது நெஞ்சத்தைப் பெரிதும் வாட்டும் என்பது திண்ணம். ஜீவஹிம்சையைக் குறைக்க பல பத்திரிகைகளும், கூட்டங்களும்,



# அரசும் அறமும்

(வித்வான்-ச. சேது சுப்பிரமணியன்.)

**வா**ரிதி சூழ்ந்த வளங்கெழு நன்னாட்டைப் போரினில் வென்றும் புகழ்த்தாயமாய் எய்தியும் அரசர் பலர் பாதுகாத்து வந்தனர். அவர்கள் தத்தம் நிலைக்கேற்பத் தங்கள் நாணயம் செய்கை முதலியனவற்றில் மாறுபாடு உடையராயினும், பொதுவாக அறம் என்னும் பெருந்துணையில் அனைவரும் கருத்தொருமித்தே தமது குடிகளைக் காத்து வந்தனர்.

அவ்வறம் அரசன் கீழ் வாழும் மக்களாயினும் அவனது அதிகாரம் பெற்ற பெரியோர்களாயினும் குற்றம் செய்தால், மந்திரி முதலிய பலரும் கூடியிருந்து யாவரிடத்தும் கண்ணோட்டம் செய்யாது நடுவு நிலைமையைப் பொருந்தி, அவர்கள் செய்த குற்றத்திற்குச் சொல்லப்பட்ட தண்டத்தைச் செய்வதேயாகும். திருவள்ளுவரும் "ஓர்ந்து கண்ணோடா திறைபுரிந்தியார்மாட்டுந் தேர்ந்துசெய் வஃதே முறை" என்ற குறளால் இவ்வறத்தை வற்புறுத்திச் செங்கோன்மையினது இலக்கணம் குறிப்பிட்டார். குறுங்கோழியூர்கிழார் என்ற புலவர் பெருமான் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறையை நோக்கி 'வேந்தே! உனது காவலரண்களில் அம்புகள் நின்று விளங்கும் உனது செங்கோலில் அறம்தங்காநின்றது. ஆதலின் நின் குடைக்கீழ் வாழும் குடிகள் தம் காதலால் நினக்கு ஏதேனும் ஏதம் வருமோ? வரின் என் செய்வோம். என்று அல்லும் பகலும் அகலாது ஏங்கும் எழிற் சிறப்புடையை' என இசைத்தனர். நடு நிலைமையாகிய அறத்தின் வழுவாது ஒழுகலே மிகச் செம்மையுற்றதாகலின் அதையே வேந்தர் கொண்டு விளங்குகிறார் என்பதற் கறிகுறியாகத் தம் கையில் ஓர் கோலை யேந்தி அதற்குச் செங்கோலெனப் பெயரிட்டுத் தம்

---

தொழிலாற்றியும் இஃது குறைந்தபாடில்லை யென்பது விசனிக்கத் தக்கதே.

முடிவாக, அன்பர்காள்! நாமெல்லோரும் தெய்வத்தன்மை வாய்ந்த இவ்வன்பை நம் இனத்தாரிடத்தும், ஏனையோரிடத்தும், இதர ஜீவராசிகளிடத்தும் பூரண விருத்தி செய்து கடவுளின் திருவருள் பெற்றுய்வோமாக.

குடிகள் அன்பாய் ஆதரிக்க ஆட்சிசெய்துவந்தனர். அரசர்கள் அறியாது அந்நெவுநிலைமை யறத்திற் சிறிது பிழைப்பின், அவ் அறத் தெய்வமே அவர்களைக் கொல்லும் யமனாகும் என்பதை "அரசியல் பிழைத்தோர்க் கறங் கூற்றாவதும்" என்று இளங்கோவடிகள் விளங்க வகுத்துரைத்தும் அவர்கள் ஏந்திய கோலையும் கொடுங்கோல் எனக் கூறியுள்ளார். முன்னர் வாழ்ந்த பொன்முடிப் புரவலர்கள் தன்னைப் பற்றிய குற்றம் நிகழ்ந்த விடத்தும், அறநெறியை விடாது நின்று விளக்கும் வீரராய் விளங்கினார்கள் என்பதைப் பண்டைப் பனுவல்களைக் கொண்டு ஆராய்வாம்.

காவிரி புரக்கும் நாட்டிற்குத் தலைமையாய்க் கலைமகளும் திருமகளும் கலந்து வாழும் பொலிவுடைய திருவாரூரை மனு என்னும் மன்னன் அரசு புரிந்தான். அவன் தன் நாட்டில் வாழும் சிற்றுயிர்க்கும் சிறு துன்பம் வாராமற் செங்கோல் செலுத்திவந்தான். அவனுக்குக் கிடைத்தற்கரிய ஓர் ஆண் மகன் இருந்தான். ஓர்நாள் அரச குமரன் தேரேறி வெளிச் செல்லுகையில், தேர்ச் சக்கரத்தில் ஓர் ஆவின் கன்று அகப்பட்டு அக்கன்றின் தாய் வருந்தக் கன்று உயிர்நீத்தது. இந்நிகழ்ச்சி மன்னனுக்குத் தெரிந்தது. அவன் விரைவில் வந்து அந்நிகழ்ச்சியைக் கண்டு மந்திரிகளை நோக்கினான். அவர்கள் பொன்னாற் பசு செய்து அந்தணர்களுக் களித்தால் அப்பாவம் நீங்கும் என்று சொன்னார்கள் மன்னன் மந்திரிகளை நோக்கி அமைச்சே! அக்கன்றின் தாய் மனம் வருந்துவதைப்போல என் மகனைத் தேர்ச்சக்கரத்திட்டு எனது மனம் வருந்தத் தேரைச் செலுத்தலே முறையாகு மென்றும் தன் குலத்துக்கு ஒரு மகனே உள்ளான் எனபதும் உணரானாய் அறத்தின் வழிச் செல்கையே அரசர் கடமை என்றும், யான் தேர்மீதிருக்க நீவிர் என் மகனைச் சக்கரத்திட்டு அவன்மேல் தேரைச் செலுத்தும் என்றும் கூறினான். இதனைச் சேக்கிழார் செங்கன் மனமும் சிவந்து நெக்குருகச் செப்பமாய் அமைத்துள்ளார்.

"ஒருமைந்தன் தன்குலத்துக்கு உள்ளான்என் பதும்உணரான்
தருமம்தன் வழிச்செல்கை கடன்என்று தன்மைந்தன்
மருமம்தன் தேர்ஆழி உறஊர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோமற்று எளிதோதான்."

மன்னன் மொழிப்படி மந்திரிகள் செய்ய அறக்கடவுள் எதிர்தோன்றி அரச குமாரனையும், ஆவின் கன்றையும், எழுப்பி அரசனையும் வாழ்த்திச் சென்றது.

செங்குட்டுவன் வேண்மாளுடன் பேரியாற்றடை கரையிலே தங்கியிருந்தபொழுது தன்னுடனடைந்த தனிப்பெருந்தேவி, யார்? என மயங்கிய பொழுது அவளது வரலாற்றைச் சாத்தனார், சேரர்பெருமானே? கோவலன் என்ற வணிகன் தன் தேவியுடன் மதுரைக்குப் பிழைக்கவந்தான். கையிற் பொருளில்லாமையால் காதலியின் காற்சிலம்பை வாங்கி விற்றுவர பொற்கொல்லரிடம் சென்றான். அக்கொல்லன் முன் அரசியின் சிலம்பு ஒன்றை அறியாது அபகரித்தனன். கோவலன் சிலம்பு கொண்டுபோகவும் இவனை அரசனிடம் கொண்டுபோய்ச் சிலம்பெடுத்தவன் இங்குளான் என இயம்பி அரசன்முன் விடுத்தான். அரசன் பொற்கொல்லன் புனைந்துரை

யை நம்பிச் சிலம்பை வாங்கிக்கொண்டு கொலைபுரிய உத்தரவளித்தான். இந்நிகழ்ச்சியை அறிந்த அவன் மனைவி அரசனிடம் அணுகி என் காற் சிலம்பே அது என்பதை அவன் முன்னர்ச் சிலம்பை உடைத்துப் பரற் கற்களால் காட்டினுள். அரசன் தன் சிலம்பு அன்று என்று அறிந்து அநீதி புரிந்தோமே என அறிவு மயங்கி வீழ்ந்து உயிர் துறந்தான். அத்தேவி பின் மதுரையை எரித்து பொற்கொல்லரை அழித்து உன்னுடைந்து தன் கணவனுடன் உயர்பதம் பெற்றுள் என்றார். இதைச் செயியுற்ற வஞ்சிக் கோன் சாத்தனுரை நோக்கி, புலவீரே! பாண்டியன் அறியாது ஊழ் வினை காரணமாகத் தவறு செய்ததால் அவன் அறம் கெட்டதாயினும் அவனது உயிர் உடன் சென்று அவ்வறத்தை நிலைபெறுத்தியது எனத் தம் அழகிய செஞ்சொற்களால்,

“தென்னர் கோமான் தீத்திறங் கேட்ட
மன்னர் கோமான் வருந்தினன் உரைப்போன்
எம்மோ ரன்ன வேந்தற் குற்ற
செம்மையின் இகந்தசொல் செவிப்புலம் படாமுன்
உயிர்பதிப் பெயர்த்தமை யுறுக வீங்கென
வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது.”

என வாயாரப் பாடிப் பாண்டியன் பெருமையைப் பாராட்டியுள்ளான்.

வடநாடாகிய பெரு நாட்டின் தலைநகராய்ச் சிறந்த அயோத்தியை அறுபதினுயிரம் ஆண்டுகள் அரசுபுரிந்தும் பத்துத் திக்கிலும் உள்ள பகைவர்களை வென்றும் வாழ்ந்த தசரதச் சக்கரவர்த்தி, தன் மனைவிக்குக் கொடுத்த வரங்களை மறுக்கவும், இல்லையென்று கூறவும் இயலாது, அவள் காலில் விழுந்து அரற்றுவார் என்னில் பண்டைப் பேரரசர்கள் அறத்தைத் தன் உயிரினுஞ் சிறந்ததாக அநுஷ்டித்தனர் என்பதைக் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் கண்டோர் மனமும் கேட்டோர் நெஞ்சும் கனிந்து கனிந்து உருக கவியமைத்தனர்.

“வாய்தந் தேன்என் றேன்இனி யானோ அதுமாற்றேன்
நோய்தந்(து) என்னை நோவன செய்து நுவலாதே
தாய்தந்(து+எ) தென்னத் தன்னை யிரந்தால் தழல்வெங்கண்
சேய்தந்(து)ஈயும் நீயிது தந்தால் பிழையாமோ.”

அறத்தைக் காக்க அரசர் ஆண்மையும் விட்டுப் பெண்டிரின் காலில் விழுந்து அவரை வேண்டி யிரங்குவாரென்றால் நாம் ஒவ்வொருவரும் இந் நடு நிலைமையாகிய அறத்தைக் கைவிடாது ஒழுகுவோமாஞல் அறக்கடவுள் நம்மைக் காக்கும் என்பது திண்ணம்.

இதுகாறுங் கூறியவாற்றால் அறநெறி ஒழுகுவதே செங்கோல் என்பதும், அதிற் பிழைப்பின் அதுவே கொடுங்கோலென்பதும், மனு மகன்மீது தேரைச் செலுத்தவும், பாண்டியன் தன் உயிரை நீக்கவும், தசரதன் தன் மனைவி காலில் விழுந்து அரற்றியும், அறத்தைவிடாது காத்தனர் என்பதும் ஒருவாறு தெளியக் கிடக்கிறது.

ஒரு நாடகம்

# புகையிலை உதயம்

"கதி"



இடம்:—வைகுந்தம்—பாற்கடல்:

[திருமால் சயனித்துக்கொண்டிருக்கிறார்; அருகில் லக்ஷ்மி இருக்கிறாள்.]

திருமால்:—பிரியே; என்ன இன்று ஒருவிதமாகக் காற்று குளிர்ந்து வீசுகிறதே! ஜலதோஷம் பிடித்துக்கொள்ளும் போலிருக்கிறது. குளிர்கிறது. அந்தப் பீதாம்பரத்தை எடுத்துப் போர்த்து.

லக்ஷ்மி:—ஸ்வாமி! எனக்கும் குளிர்கிறது. என்றும் இப்படி இருந்ததே இல்லை.

(ஒருவன் ஓடி வருகிறான்.)

வந்தவன்:—ஸ்வாமீ! என்ன ஆச்சரியம், என்ன ஆச்சரியம்!

திருமால்:—என்னடா சமாச்சாரம்?

வந்தவன்:—ஸ்வாமீ! பாற்கடல் முழுவதும் தயிர்க்கடலாய் விட்டது.

(நாரதர் வருகிறார்.)

லக்ஷ்மி:—இதோ நாரதர் வருகிறார்.

நாரதர்:—நாராயண! நாராயண!

திருமால்:—என்ன நாரதரே! ஏதாவது விசேஷம் உண்டா?

நாரதர்:—நான் வரும்போது விசேஷ மில்லாமலிருக்குமா? இனிமேல் தேவரீருடைய திருநாமம் தத்யப்தி நாராயணரென்று மாறவேண்டியதுதான். பாற்கடல் முழுவதும் பாறைத் தயிராக உறைந்துவிட்டது.

திருமால்:—ஏன் அப்படி?

நாரதர்:—யாரோ ஒரு தடியன் தேவரீரைத் தரிசிக்க வந்தான். கையில் எலுமிச்சம்பழம் கொண்டுவந்தான். அது தவறிக் கீழே விழ அதன் மேல் தடுக்கி விழுந்தான். அவன் பெரிய சரீரி. அவன் விழுந்த இடம் பாற்கடல் ஓரம். அவன் பழத்தின்மேல் விழுந்தவுடன் அது நசுங்கிப்போய் அதன் சாறு பாற்கடலிற் போய்ப் பீச்சியது. அந்தப் புளிப்பினால் அந்த இடம் தயிராகி விட்டது. கொஞ்ச நாழிகையில் அதைச் சுற்றிய இடமும்

தயிராயிற்று. இவ்வாறு பாற்கடல் முழுதும் தயிராயிற்று. நாழிகை யாக ஆகப் பாறைபோல் இறுகிவிட்டது.

திருமால்:—அதுதான் குளிர்ந்த காற்று வீசுகிறது. எனக்கு ஜல தோஷம்கூடப் பிடித்துவிட்டது. குளிர் பொறுக்க முடியவில்லை. இதற்கு ஏதாவது மருந்து தேடவேண்டும்.

நாரதர்:—என்ன! எனக்குக்கூட இங்கே வந்தவுடன் ஜலதோஷம் பிடித்துவிட்டதே. இதென்ன ஆச்சரியமா யிருக்கிறது!

லக்ஷ்மி:—நாரதா, இதற்கு ஏதாவது பரிஹாரம் தேடவேண்டும். எனக்குத் தலைவலிகூட வந்துவிடும் போலிருக்கிறது.

திருமால்:—எங்கே மருந்து கிடைக்கும்? யாரை விசாரிக்கலாம்?

நாரதர்:—ஏன்! கைலாஸம் போனால் ஏதாவது கிடைக்கலாம்.

திருமால்:—சரி, அப்படியே செய்வோம்.

## II

இடம்:—கைலாஸம்.

சிவபெருமான்:—இன்றைக்கு நமக்கு ஏதோ ஒருவிதமாக இருக்கி றது. தலை பாரமாக இருக்கிறது.

பார்வதி:—ஆமாம், அந்தக் கங்கையைக் கீழே எடுத்தெறியுங்க ளென் றால் கேட்பதே இல்லை. சந்திரனொன்று. இவை யெல்லாம் சுமத்திக் கொண்டிருந்தால் ஏன் பாரமாக இராது?

சிவபெருமான்:—ஜலதோஷம் பிடித்திருக்கிறது. இதுவரைக்கும் இல்லாத ஆச்சரியமாக இருக்கிறது.

பார்வதி:—நீங்கள் அபிஷேகத்திற் பிரியமுடையவரென்று ஒரு பேருண்டாய்விட்டது. எல்லாரும் தேனையும் பாலையும் தயிரையும் இள நீரையும் அபிஷேகம் பண்ணிப் பண்ணி ஜலதோஷம் பிடித்துவிட்டது. முன்பே சடை; இந்த அபிஷேகம் பண்ணினால் அப்புறம் சொல்லவேண் டுமா?

சிவபிரான்:—பார்வதீ, என்ன நீ உன்பாட்டுக்கு அடுக்கிக்கொண்டே போகிறாயே, ஜலதோஷம் வந்துவிட்டதே; என்ன பண்ணலாமென்று யோசித்தால் நீ இதுதான் சமயமென்று இடித்துக் காட்டுகிறாயே!

பார்வதி:—செய்கிறதெல்லாம் செய்துவிட்டுத் தலைப் பாரமாயிருக்கிற தென்றால் நான் என்ன செய்வேன்?

சிவபெருமான்:—சரி; உன்னோடு பேசுவதிற் பிரயோசனமில்லை.

பார்வதி:—க்ஷமிக்கவேண்டும். தெரியாமற் பேசி விட்டேன். இதற்கு என்ன மருந்து போடுவதென்று யோசித்துப் பார்க்கிறேன்......

(திருமால் பரிவாரங்களுடன் வருகிறார்.)

திருமால்:—போற்றி! போற்றி!!

சிவ.—வா, அப்பா. எங்கே வெகு நாளாகக் காணவில்லை? சௌக்கியந்தானே.

திருமால்:—தேவரீருடைய அநுக்ரஹத்தால் சுகந்தான். ஆனால் இந்த இரண்டு தினங்களாக ஜலதோஷம் அதிகமாயிருக்கிறது. தலை வலிக்கிறது.

சிவ:—ஏது உனக்கும் வந்துவிட்டதா? எனக்கும் அப்படித்தான் இருக்கிறது.

திருமால்:—தேவரீருக்குக் கூடவா? பூலோகத்தில்தான் இத்தகைய வியாதிகள் உண்டென்று கேள்விப்பட்டிருக்கிறேன். இங்கேகூட வந்துவிட்டால் அப்புறம் நாங்களெல்லாம் என்ன செய்வது?

சிவ:—பூலோகத்தில் இதற்கு ஏதாவது மருந்து இருக்குமல்லவா? பிரமாவைக் கேட்டால் தெரியும்.

திருமால்:—அவனை இங்கே வரவழைக்கலாமா?

சிவ:—வேண்டாம். நாமே அங்கே போய் விசாரிக்கலாம்.

III

இடம்:—சத்யலோகம்.

பிரமா:—என்ன ஸரஸ்வதி, இன்று ஒருவிதமாக இருக்கிறாய்?

ஸரஸ்வதி:—நாலு பேரைப்போல நானும் இருக்கக் கொடுத்துவைக்கவில்லை.

பிரமா:—என்ன அப்படிச் சொல்கிறாய்? உனக்கு என்ன விதத்திற் குறைவிருக்கிறது.

ஸரஸ்வதி:—இன்றைக்கு ஆகாச கங்கையில் ஸ்நானம் பண்ணப் போனேன். பார்வதீதேவியும் லக்ஷ்மீதேவியும் வந்திருந்தார்கள். மூன்று பேரும் ஸ்நானம் பண்ணினோம். பின்பு லக்ஷ்மீதேவி ஸ்ரீமந் நாராயணனைப் பூஜிப்பதற்காக திருத்துழாய் பறித்துக்கொண்டாள்.

பார்வதிதேவி வில்வம் பறித்துக்கொண்டாள். 'நீ மட்டுமொன்றும் பறித்துக் கொள்ளவில்லையா? உன் அகமுடையானுக்குப் பிரியமான பத்திரம் எழுது?' என்று இருவரும் கேட்டார்கள். நான் என்ன செய்வது. உங்களுக்கென்று என்ன பத்திரம் இருக்கிறது. கண் கலங்கிக்கொண்டு சும்மா இருந்தேன். உங்களுக்கும் ஒரு பத்திரம் இருந்தால் நானும் கை நிறையப் பறித்துக்கொண்டு வரமாட்டேனா?

பிரமா:—அடி பைத்தியம், இதற்குத்தானா இவ்வளவு கோபம்? பூலோகத்தை யெல்லாம் சிருஷ்டிக்கிறபொழுது பத்திரம் ஒன்றை உண்டாக்க

மாட்டேனே? சரி; ஔபாஸனம் பண்ணவேண்டும். எல்லாம் ஸித்தம் பண்ணிவை.

(ஸரஸ்வதி ஸித்தம் செய்கிறாள். பிரம்மா, ஔபாஸனம் செய்ய ஆரம்பிக்கிறார்.)

ஸரஸ்வதி:—என்னவோ வாத்திய கோஷம் கேட்கிறதே!

பிரமா:—யாரோ கூப்பிடுகிறார்கள்.

(நாரதர் வருகிறார்.)

பிரமா:—வரவேண்டும், வரவேண்டும். ஏது அபூர்வமாக இருக்கிறதே.

நாரதர்:—அதெல்லாம் இருக்கட்டும். பரமேஸ்வரனும் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியும் இங்கே வந்துகொண்டிருக்கிறார்கள்.

பிரமா:—ஹா! என்ன! அவர்கள் இங்கே வருவதா! இந்தப் புழுவைத் தேடிக்கொண்டு அவர்கள் எழுந்தருள்வது அபசாரமல்லவா?

(சிவபெருமானும் திருமாலும் பரிவாரங்களுடன் வருகிறார்கள்.)

பிரமா:—போற்றி! போற்றி!! இவ் வெளியேனை ஒரு பொருளாகக் கருதி எழுந்தருளிய பெருங் கருணையை என்னவென்பேன்! அடியார்க் கெளியனென்னும் திருநாமத்தை நாயேனுக்கும் அறிவுறுத்தவோ வேதாந்த சிகா பீடத்தில் மேவும் பசுபதி இங்கு வந்தது! தன்யனானேன்! இனி உய் வண்ணமன்றி மற்றோர் துயர்வண்ண முறுவதுண்டோ!

என்னுடைய பிதாவும் ரக்ஷக மூர்த்தியுமாகிய ஸ்ரீமந் நாராயணரும் உடனெழுந்தருளியது பிரிய புத்திரனை அநுக்ரஹிக்கவோ? அன்றிச் சச்சிதாநந்த ஸ்வரூபியாகிய பரமேசுவரனுடைய பரம கருணைக்கு அடியேனை ஆட்படுத்தவோ!

(அர்க்ய பாத்யாதிகள் கொடுத்து உபசரிக்கிறார்.)

பிரமா:—ஆஸனத்தில் எழுந்தருளவேண்டும்.

(வணங்குகிறார்.)

சிவ:—பிரமதேவா! உன்னுடைய சிருஷ்டி நன்றாக நடைபெற்று வருகிறதா?

பிரமா:—இந்த சேகரனாகிய பரமேசுவரனுடைய பரமகிருபை இருந்தால் துரும்பும் அகிலாண்டத் தொகுதியையும் படைத் தளிக்காதோ! நாயேன் பிரபுவின் கருணாரஸத்தைப் பருகியிருக்கும் பாக்கியம் பெற்றேன்; அக்கருணையின் விசேஷத்தால் எல்லாம் செவ்வனே நடைபெறுகிறது.

சிவ:—நாராயணா, வந்த விஷயத்தை விரைவிற் சொல்லிப் பரிஹாரந் தேடவேண்டும்.

பிரமா:—எம்பெருமான்! இந்தத் துரும்பினால் பணித்துக்கொள்ளும் பணியிருந்தால் செய்யக் காத்துக்கொண்டிருக்கிறது.

திருமால்:—நீ சிருஷ்டிக்கும் பூலோகத்தில் ஜலதோஷம், தலைவலி உண்டா?

பிரமா:—எம்பெருமான் பூலோக வியவஹாரங்களை தெரியாதவர் போல் வினவுவது எனக்கு ஒரு பெருமையை கொடுக்கவோ? அங்கே இவை ஸர்வ ஸாதாரணமான வியாதிகள்.

திருமால்:—அதற்கு லோக ஜனங்கள் என்ன பரிஹாரம் செய்துகொள்ளுகிறார்கள்?

பிரமா:—ஏதேதோ செய்துகொள்கிறார்கள். நியதியாக ஒன்றும் காணவில்லை. எம்பெருமான் அந்த விஷயத்தை விசாரிக்கத் திருவுள்ளங் கொண்டதன் காரணத்தை அடி நாயேன் அறியலாமோ?

திருமால்:—இப்பொழுது என்றுமில்லாத ஓர் ஆச்சரியம் நடந்திருக்கிறது. பரமேசுவரனுக்கு ஜலதோஷமும் தலைப் பாரமும் உண்டாயிருக்கின்றன. எனக்கும் அப்படியே உண்டாயிருக்கின்றன. அவற்றைத் தீர்த்துக்கொள்ள என்ன வழியென்று கேட்பதற்காக உன்னிடம் வந்தோம்.

பிரமா:—ஸர்வாந்தர்யாமியாகிய பகவானுக்கும் மஹா மாயா வல்லபராகிய எம்பெருமானுக்கும் தெரியாத பரிஹாரம் என்ன இருக்கிறது? குழந்தையிடம் புதிதாகத் தெரிந்துகொள்ளும் பெரியவர்கள் செயலைப் போல் இதையும் எண்ணுகிறேன். ஆக்ஞை யிட்டால், ஔபாஸனத்தைப் பூர்த்தி பண்ணுகிறேன். ஜலதோஷத்துக்குப் பரிஹாரம் லோகத்துக்கெல்லாம் கிடைக்க வேண்டுமென்னும் பரமோபகாரத்திற்காக வ்யாஜ ரூபமான இந்த ஆக்ஞையை எளியேன் நிறைவேற்ற முயல்கிறேன்.

(பிரமா ஔபாஸனம் செய்யத் தொடங்குகிறார்.)

குண்டோதரன்:—கும்போதரா! இந்த இரண்டு நாளாகப் பல்வலி பொறுக்கவே முடியவில்லை.

கும்போதரன்:—கண்டதை யெல்லாம் தின்றால் என் வராது.

குண்டோதரன்:—இறைவனுக்கும் திருமாலுக்குமே ஜலதோஷம் தலைவலி வந்தனவென்றால் நாமெல்லாம் எம்மாத்திரம்! இதைப் போல ஆச்சரியம் ஒன்றுமில்லை...............அங்கே பார் பிரமா ஔபாஸனம் பண்ணுகிறார். என்ன மருந்து தரப்போகிறாரோ தெரியவில்லை. இவருக்கு வந்த அதிர்ஷ்டந்தான் என்ன! சிவபெருமானும் திருமாலும் இவரைத் தேடி வரும்படி.

கும்போதரன்:—உனக்கென்ன கொஞ்ச காலாகப் பல்வலி யென்று சொல்கிறாயே. அதற்கு மருந்து இவரிடம் கிடைக்குமா? கேட்டுப் பார்.

குண்டோதரன்:—போடா, பைத்தியம் இதென்ன வைத்தியசாலையா?

கும்போதரன்:—அதென்ன ஔபாஸனப் புகையிலிருந்து ஓர் இலை வருகிறது.

(ஔபாஸனப் புகையிலிருந்து பிரமா ஓர் இலையை உண்டாக்குகிறார்.)

பிரமா:—எம்பெருமானே! இந்த இலையைக் கடாட்சிக்க வேண்டும். இதுவே இந்த ஜலதோஷம் முதலியவைகளுக்குப் பரம ஔஷதம். இந்த இலை இந்தப் புகையிலிருந்து உண்டானதாகையால் இதன் பெயர் புகையிலையெனப்படும். என்னுடைய பத்னி எனக்கென்று ஒரு பத்திரம் இல்லையென்று குறை யுடையவளாக இருக்கிறாள். தேவரீர்களுடைய சந்நிதியில் உண்டான இதுவே எனக்கு உவந்த பத்திரமாகும். இது பிரம்ம பத்திரம் என்று பிரசித்தி அடையும். ஸரஸ்வதி! இதோ இதைப் பெற்றுக்கொள்.

ஸரஸ்வதி:—பாக்கியம்.

(பெற்றுக்கொண்டு நமஸ்கரிக்கிறாள்.)

பிரமா:—இதோ இந்தப் பத்திரத்தைப் பறித்து வாட்டுகிறேன்.

(வாட்டி கையிலெடுத்துப் பொடி பண்ணுகிறார்.)

பிரமா:—இந்தச் சூர்ணந்தான் ஜலதோஷத்துக்கு நல்ல மருந்தாக உதவும். பரமேசுவரனும் எந்தையாரும் கிரஹித்தருள வேண்டும்.

(சிவபெருமானும், திருமாலும் வேறு சில தேவரும் பொடியை வாங்கிப் போட்டுக் கொள்கின்றனர்.)

சிவ:—என்ன ஆச்சரியம்; இது எவ்வளவு சுகமாக இருக்கிறது?

திருமால்:—பிரமா நல்ல காரியம் செய்தான்.

(எல்லோருந் தும்புகின்றனர்.)

பிரமா:—இந்தச் சூர்ணம் ஜலதோஷம், தலைவலி முதலிய எல்லாவற்றையும் போக்கும். இது இவ்வளவு தேவர்களுக்கும் உபயோகப்பட்டது இந்த மாதிரியே எல்லா மனுஷ்யர்களுக்கும் இனி உபயோகமாகும். இதனால் ஸமரஸ பாவம் வளரும். இதோ இந்த வாட்டின புகையிலை பல் வலிக்கு நல்ல மருந்து.

கும்போதரன்:—அடே குண்டோதரா! கேள், என்னவோ சொல்கிறார். பல் வலிக்குக்கூட அந்த இலை மருந்தாம்.

குண்டோதரன்:—நான் போய்க் கேட்கிறேன்.

(பிரமாவிடம் மெதுவாகப் போகிறான்.) ஸ்வாமீ, அநுக்ரஹிக்க வேண்டும். அடியேனுக்குப் பல்வலி யதிகமாக இருக்கிறது. (ஒரு துண்டு வாங்கி அடக்கிக் கொள்கிறான்.) அகோபாக்யம்! என்ன ஆச்சரியம். என்னை யறியாமல் ஆனந்தமுண்டாகிறதே!

பிரமா:—இந்தப் புகையிலையைச் சுருட்டி நெருப்பைக் கொளுத்திப் புகை பிடித்தால் குளிரெல்லாம் போய்விடும். அந்தச் சுருட்டுகள் சில தெய்வங்களுக்குக்கூட நைவேத்தியமாக வைக்கப்படுவனவாக!

பதார்த்தங்களில் கடின பதார்த்தம், திரவ பதார்த்தம், வாயு பதார்த்தம் என்று மூன்று வகை. பொடி கடின பதார்த்தம், புகையிலையாக மெல்லும்பொழுது அதன் ரஸம் திரவ பதார்த்தம்; சுருட்டு பிடிக்கும்

பொழுது அந்தப் புகை வாயு பதார்த்தம். இப்படியுள்ள சிறந்த புகையிலை திரிமூர்த்திகளும் இருக்கும்பொழுது உண்டாக்கப்பட்டது.

தேவர்கள்:—இதனுடைய பெருமையே பெருமை.

பொடியாக வெமக்கின்பம்
புகுத்துகின்ற புகையிலையைக்
கடியாமல் எந்நாளும்
கைக்கொண்டு வாழ்த்துதுமே!

குண்டோதரன்:—

பல்வலியைப் போக்கியின்பம்
பாலிக்கும் புகையிலையை
நல்வலியோ டெந்நாளும்
நாட்டமொடும் வாழ்த்துதுமே.

தேவர்கள்:—

சுருட்டாகிப் புகையளித்துத்
துளக்குகுளிர் போக்குகின்ற
அருட்டாவும் புகையிலையை
அனுதினமும் வாழ்த்துதுமே.

கும்போதரன்:—

சமரஸபாவம் வளர்க்குஞ்
சாதனமாம் புகையிலையை
அமரருணவாமமுதா
அறிந்தென்றும் வாழ்த்துதுமே.

தேவர்கள்:—

முப்பொருளாய் முக்கடவுள்
முன்னிலையிற் சிறப்பெய்தும்
செப்பரிய புகையிலையின்
சீர்பரவி வாழ்த்துதுமே!

எல்லோரும்:—

வாழி புகையிலை வாழி புகையிலை வாழி புகையிலையே!
வாழி பொடிதரும் நீளுமிலையென்றும் வாழி புகையிலையே!!

# இமயமலை எங்கள் மலை

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

மனிதனாய்ப் பிறந்த எவனுக்கும் தேசாபிமானம் அவசியம் என்பதைப் பலதேசப் பெரியோர்களும் அவரவர் பாஷைகளிலே வற்புறுத்தி யிருப்பது அறிவாளிகள் அறிந்ததொரு ஸர்வ சாதாரணமான விஷயம். நமது நாட்டுப் பெரியார்களும் அவ்விதம் சொல்லி யிருக்கின்றனர்! சொல்லி வருகின்றனர்!! சொல்லவும் செய்வார்கள்!!! பாரதியாரும் அவ்வகையிலேயே "வந்தே மாதரம்"......தாய்நாட்டை வணங்குவோம் என்ற பாடலைத்தவிர, மற்ற பல பாடல்களிலும், அவசியமும் சந்தர்ப்பமும் நேர்ந்த ஒவ்வொரு இடத்திலும் சொல்லியிருப்பது பலரும் அறிவார்கள். அவர் பாடல்களில் எதைப் பார்த்தாலும், படித்தாலும், கேட்டாலும் தேசாபிமானம் ஏற்படுவது திண்ணம். அந்த முறையில், 'சுதேச வணக்கம்'' என்ற பாடலுக்குப் பிறகு, பிரத்தியக்ஷப் பிரமாணமாய்க் காணக்கூடிய சில அசைக்க முடியாத சான்றுகளைப் பொறித்து நமது நாட்டின் சிறப்பை வருணித்து அதன்மூலம் நம் பாரத நாட்டில் பிறந்ததன் பெருமையை விளக்குகிறார். காலம் இப்பொழுதுள்ள நிலையில் ஆராய்ச்சியின் காரணமாக அறிவு விசாலமாகி, பிரத்தியக்ஷ ப்ரமாணங்களின் மூலமாகவேதான் எதையும் ஒப்புக்கொள்ளும் நிலைமையில் அனைவரும் வாழுகிறோம். பிரத்தியக்ஷப் பிரமாணங்களும் "வெள்ளைக்காரர்களான மேற்கு நாட்டார்களுடைய ஆமோதிப்பு முத்திரைகளும் கூடி'' யுள்ளனவாகத்தான் இருக்கவேண்டும். ஏனெனில் அந்த அளவுக்கு நம்மையும் மறந்த மேல்நாட்டு மோகாந்தகாரத்தில் நம்மில் இன்னும் பலரும் மூழ்கிக் கிடக்கிறோம் !

மேற்கு நாட்டார், முக்கிமுக்கிப் பார்த்தும், பல உயிர்களைத் துறந்தும் கணக்கிடமுடியாத உயரமுடைய "இமயமலை"தான் முதல் பிரத்தியக்ஷப் பிரமாணம். இதுபோன்ற மூன்று உதாரணங்கள் முதல் பாட்டில் இருப்பதை,

மன்னும் இமயமலை எங்கள் மலையே!
மாநிலமீ திதைப்போற் பிறி தில்லையே!!
இன்னறு நீர்கங்கை யாறெங்கள் யாறே!
இங்கிதன் மாண்பிற்கு எதிரொது வேறே!!
பன்னரு முபநிட தநூலெங்கள் நூலே!
பார்மிசை ஏதொரு நூலிது போலே!!

(ஆகையினால் ஏ பாரத மக்களே!)

பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே!
போற்றுவோ மிஃதை எமக்கில்லை யீடே!!

என்று பூபாள ராகத்தில் பாடவேண்டு மென்பதையும் சேர்த்து, படித்துச் சிந்தித்து உணரலாம். விடியற் காலத்திலே உதயவேளையில் பூபாளம் பாடுவதென சங்கீத ரஸிகர்கள் வல்லவர்கள் சொல்லுவது இயற்கை. "ஓ! இந்தியர்களே இதுவரையில் தூங்கினாலும் இனியாவது விழித்துக் கொள்ளுங்கள். மேற்குநாட்டார் வந்து நமதுநாட்டு அற்புதங்களை அடுத்தடுத்து முயன்றும் அளவிடக்கூடாத நிலையில் பிரமித்து நிற்கின்றனர். கங்கை நதி ஜலத்தின் மகிமைகளையும் சக்திகளையும் பற்றி ஆராய்ச்சி செய்து ஆஹாஹா வென்று ஆச்சரியப்படுகின்றனர். மாக்ஸ்முல்லர் என்ற ஜெர்மனி அறிவாளி வேதங்களையெல்லாம் அப்படியே கொண்டுபோய் மொழி பெயர்த்து ஸாரங்களை மேற்குநாட்டார் பருகி ஆத்மார்த்த அறிவு பெற்றதுடன், நமக்கும் அனுப்பி நம்மையும் தட்டிக் கொடுக்கின்றனர். இவ்வளவும் இருக்க நீங்கள்மட்டும் "பசிதீர உண்பதும், முயங்குவதும், உறங்குவதும், இறப்பதுமாய், பாமரராய் விலங்குகளாய்த் திரியவேண்டாம்" என்று சொல்லுவது போல் தோன்றுகிறது. பாரதியார் என்ன நினைத்து பாடினாரோ? நாட்டு வழக்காக "காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு" என்ற முறையில் "பொன்னொளிர் பாரத நாடெங்கள் நாடே! போற்றுவோ மிஃதை எமக்கில்லை யீடே!!" என்று சொல்லவில்லை என்பதையும் உணரவேண்டும். கங்கா ஜலத்திற்குள்ள கிருமிகளைக் கொல்லும் சக்தியும், தாமிரப் பாத்திரத்திலோ, எந்தப் பாத்திரத்திலோ மாதக் கணக்காக, வருஷக் கணக்காக அடைத்து வைத்தாலும், பாசி பிடித்து, நாற்றமடித்துப்போகும் தன்மையற்ற குணமும் இவற்றை மேற்குநாட்டார்கூட ஒப்புக்கொள்ளும் பெருமையும் தமிழ்நாட்டில் சில வருஷங்களுக்கு முன்னால் பிரசாரம் செய்யப்பட்டது யாவருக்கும் ஞாபக மிருக்கலாம்.

இரண்டாவது பாட்டிலுள்ள சான்றுகளும், சரித்திரங்களில் கண்டவற்றைக் கையாளுவது தெளிவாகும்.

மாதவ வீரர் மலிந்த நன்னாடு!
மாமுனிவோர் வாழ்ந்த பொன்னாடு!!
நாரத கானம் நலந்திகழ் நாடு!
நல்லன யாவையும் நாடுறு நாடு!!
பூரண ஞானம் பொலிந்த நன்னாடு!
புத்தர் பிரானருள் பொங்கிய நாடு!!
பாரத நாடு பழம்பெரு நாடே!
பாடுவோ மிஃதை எமக்கில்லை யீடே!!

என்றதில், பலபல வீரர்கள் கூர்க்கர்கள் என்றும், சீக்கர்கள் என்றும், ராஜபுத்திரர்கள் என்றும், வீரமறவர்கள் என்றும், வங்காளிகள் என்றும், ஹிந்துஸ்தானத்து மல்லர்கள் என்றும் கண்டு வேறொரு சந்தர்ப்பத்தில் எழுதியிருப்பவர்களில், மஹாராஷ்டிரர்களை இங்கு எடுத்து "மாதவ வீரர்"

மலிந்த நன்னாடு என்று எழுதியிருக்கிறார். அப்படி எடுத்து இங்கே எழுதிய காரணத்தையும் அந்தக் கொடிவணக்கப் பாட்டிலேயே, "போரில் காலனும் அஞ்சக் கலக்கும் மறாட்டர்" என்ற குறிப்பிலேயே காட்டுகிறாரோ என்று நினைக்கவேண்டி யிருக்கிறது. இப்படி முரட்டு வீரர்கள் மட்டுமின்றி, மாமுனிவோர் பலர் வாழ்ந்ததையும் சொல்லி அக்காலத்தில் பத்துத் திக்குகளிலும் ஜெயத்துடன் சென்றுவரும் சக்கரவர்த்திகளும், திரிகாலமும் உணர்ந்து முற்றும் துறந்து "லோகாஸமஸ்தாத் சுகினோபவந்து" என்றபடி "நாட்டின் நன்னலமெண்ணிப் பூசை செய்யும்" பெரியார்களான முனிவர்களின் யோசனைகளைக் கேட்டே, குடிகளைக் கொற்றவன் குழந்தைகளாகவும், குடிகள் கொற்றவனைக் கொண்ட தகப்பனாகவும் பாவித்து ராஜரீகம் நடந்ததென்பதைச் சித்திரிக்கிறார். அடுத்து பூரணஞானம் பொலிந்து, 'எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிருக் கவ்வுயிராய் அங்கங்கிருப்பது நீயன்றோ பராபரமே" என்ற தாயுமானார் வாக்குப் பிரகாரமும், "எல்லா உலகிற்கிறைவன் ஒருவன், எல்லா உடலும் இறைவன் ஆலயமே" என்ற அறநூல் வாக்குப் பிரகாரமும், யாகப்பசுவாக வந்த நொண்டியாட்டுக்குட்டியைச் சுமந்து, அக்குட்டியினுடைய தாயின் நன்றியறிதல் கண்ணீரைக் கண்டு சித்தமிரங்கி, சைசுநாக வம்சத்தைச் சேர்ந்த மகத அரசன் பிம்பிசாரன் ராஜசபையில் உயிர்க்கொலை யாகத்தை நிறுத்தி, அஹிம்சா தர்ம சக்தியை நிலைநிறுத்திய, 'புத்தர் பிரானருள் பொங்கிய நாடு" என்பதில் எவ்வளவு கருத்துக்களை ஆழ்த்திப் பதித்திருப்பது விளங்கும். இவையெல்லாம் இன்று நேற்று அல்ல! ஆனால் வெகு பழமையான காலத்தில் என்பதை, "பாரதநாடு பழம் பெருநாடே! பாடுவம் இஃதை யெமக்கில்லை யீடே!!" என்று உணர்த்துவது வெகு அழகு.

முதல் பாடலில் பிரத்தியக்ஷமான ருஜுக்களையும் இரண்டாவது பாட்டில் சரித்திர சம்பந்தமான ருஜுக்களையும், "அணுவைத் தொளைத்து எழு கடலையமைத்த குறளை"ப்போன்று சுருக்கமாக அமைத்து, அதே போக்கில் பூகோள, பூசார ருஜுக்களையும் கொடுத்து நம்மில் பலருக்குப் புத்தி வரக்கூடிய நிலைமையை விளக்கி, மூன்றாவது பாட்டில் காட்டுகிறார். எடுத்த எடுப்பில்,

> தன்னலம் பேணி இழிதொழில் புரியோம்!
> தாய்த்திரு நாடெனில் இனிக்கையை விரியோம்!!

என்றும், அப்படிப் பாடுபடும்போது,

> இன்னல்வந் துற்றிடும் போததற் கஞ்சோம்!
> ஏழையராகி இனி மண்ணில் துஞ்சோம்!!

என்றும், நம்மெல்லாரையும் நினைக்கச் செய்கிறார். இவ்வளவு சொன்ன பிறகாவது 'பண்டுபோயின நாட்களுக்கு இனி மனம் நாணும் மனோபாவம் வாட்டும்' என்று விரும்புகிறார் போலும். ஏனெனில்,

> கன்னலும் தேனும் கனியுமின் பாலும்,
> செந்நெலும் கதலியும் நல்கு மெக்காலும்!
> அப்படிப்பட்ட,

உன்னத ஆரிய நாடெங்கள் நாடே!
ஓதுவம் இஃதை யெமக்கில்லை யீடே!!

என்று நம்மெல்லாரையும் ஊக்கப்படுத்தும் நேர்த்தியை எவ்வளவு விவரித் தெழுதினாலும் போதாததாகும்; முடியாததும் ஆகும். இயற்கை வளம் பொருந்தியது இந்தியா. பயிர் விளைவுக்கு அத்தியாவசியமான சூரிய உஷ்ணம் வேண்டியது உள்ளது இந்தியா. நல்ல மழையல்லது மழையால் போஷிக்கப்பட்ட நதிகள் உள்ளது இந்தியா. பயிர் செய்வதற்கு விஸ்தாரமானதும் உரமுள்ளதுமான நிலப்பரப்பை உடையது இந்தியா. நல்ல விவசாயம் முறை தெரிந்து அநாதிகாலந்தொட்டு, பலவகை விளைபொருள்களை விளைவிக்கக்கூடிய அறிவும், ஆற்றலும் ஒருங்கே யமையப்பெற்ற புண்ணியமக்கள் நிறைந்தது இந்தியா. கிருஸ்து பிறப்பதற்கு பல ஆயிர வருஷங்களுக்கு முந்தியே அறுசுவை பேதங்களுடன், உண்டி சமைத்து விருந்தினரை, ஒப்புடன் முகமலர்ந்து உபசரித்தது உலக சரித்திரத்திலேயே இந்தியா. நூறு குற்றங்களல்ல நூறுயிரம் குற்றங்களை, ஆயிரம் தடவைகளில்லல நூறுயிரத் தடவைகளில் மறந்து குற்றங்களை யெல்லாம் நீக்கி, நன்குணத்தைக் கொள்ளப்பழகி, அனுஷ்டிப்பது இந்தியா. தினையளவு நன்றி செய்யினும் பனையளவாகக் கொள்வர் பயன்றெரிவார் என்பதை கணக்குக்கு அகப்படாத முற்காலத்திலேயே போதித்திருப்பது இந்தியா. மிக நாகரீக முற்போக்கடைந் திருப்பதாகக் கொள்ளும் இந்தப் பேய் நாகரிக காலத்திலும், அஹிம்சையின் வெற்றி பெறுவோம் என்று அன்று "அருள்வாட் சுடர்கொண்டேந்திய அசோகனுர்" கொள்கையை இன்று சந்தேகப்ரவர்த்திகளுக்கும் உளங்கொள நடத்திக்காட்டுவது இந்தியா. பாரி ஆயி, சந்திரன் சுவர்க்கி, சடையப்பவள்ளல் போன்ற வள்ளல்கள் பிறந்து வழிகாட்டியது இந்தியா. பசுங்கன்றின் உயிர்க்காக தன் சீமந்த புத்திரனைத் தேர்க்காலில் கிடத்தி உயிரைக்கொடுத்து நீதியைப் பரிபாலனம் செய்தது இந்தியா. இது புராணக் குப்பையென்றால், மொகலாய சக்கரவர்த்தினி நூர்ஜஹான் ஆராய்ச்சிமணியைக்கட்டி, அதை அடித்து உள்ளேவந்த வண்ணாத்தி கையில் துப்பாக்கியைக் கொடுத்து, வண்ணானைக் கொன்ற சக்கரவர்த்தியைச் சுடும்படி அனுமதி யளித்ததையாவது நம்பலாகாதா?

இவ்வளவு சான்றுகளும் வெள்ளைக்காரர் முத்திரையுள்ளவை யென்பது மீண்டும் குறிப்பது மிகையாகாது. உலகத்திலுள்ள முக்கியமாக உஷ்ணம், சமசீதளம், அதிசீதளம் என்ற மூன்றுவகை சீதோஷ்ணங்களின் பிரதேசங்களையும், அதற்கேற்ற ஜீவராசிகளையும், பயிர் வகைகளையும் ஒருங்கே யமையப்பெற்றது உலகத்திலேயே இந்தியா. பல தீர்த்தங்களும், ஆலயங்களும், பலவித இயற்கை யழகுகளையும் கொண்டது இந்தியா. பல மதாசாரங்களையும் தன்னுள்ளேயே அடக்கிக் கொண்டிருக்கிறது என்பதை "செப்பொறு இடர்க்கடலை ஜெயித்தே நின்று கர்ஜித்து விவேகாநந்தர் நிலைநிறுத்திவைத்த ஹிந்துமதம அநாதிகாலந்தொட்டு ஏற்பட்டது இந்தியா. நபிகள் நாயகம், இயேசு கிறிஸ்து, ஸொராஸ்ட்டர், கன்பூஷியஸ் முதலிய முக்கிய மதஸ்தாபகர்களையும் ஈன்ற ஆசியாவிலுள்ளது இந்தியா. தன்னளவிலும் புத்தர், மஹாவீரர், குருநானக், சங்கரர், ராமாநுஜர், மத்வர், ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகாநந்தர் பிறந்து உலகத்தாரால் அடிவணங்கப்பட்டது இந்தியா. இந்தியாவில், "எல்லோரும் அமரநிலையை யெய்தும்

வழியை உலகிற்களிக்க"ப் போவது இந்தியா. ஆம். இந்தியா உலகிற் களிக்கும்!

நாட்டு வழக்கமாக ஒரு தூதன் எதோ ஒரு இந்திய அரசனிடம் வந்து, "மஹாராஜா......வந்து நமது ஊரிலுள்ள, அரண்மனையிலுள்ள எல்லாவற்றையும் கொண்டுபோய் விட்டாள் என்று சொன்ன சமா சாரத்தை சாந்தமாக ஏற்றுக்கொண்டு, "என்ன முழுகி விட்டது? என் தெய்வத்தையும், காற்றையும், மேகத்தையும், சூரிய வெளிச்சத்தையும், பூமி சாரத்தையம் கொண்டுபோய்விடவில்லையே?" என்று பதில் சொன்ன தாக கோளப் பிரதேசக் கதையொன்றுண்டு. அம்மாதிரியாக "உள்ள தைக்கொண்டு, போனதற்கு வருந்திப் புழுங்காத புனிதர்கள் எவ்வளவோ? இவ்வளவு சுகங்களும், செல்வங்களும் இருந்தாலும், 'பிறந்தவர் யாவரும் இறப்பதுறுதி" "வாழ்வாவது மாயம் மண்ணாவது திண்ணம்" "பிறக்கும் பொழுது கொண்டு வராமலும், இறக்கும் பொழுதுகொண்டு போகாமலும், நடுவே குறிக்கு மிச்செல்வம்" என்பதையும் அறிந்து "கமலநீர்போல் பிரிந் திருந்து வாழ்க்கை நடாத்தி தெய்வத்திருவருளில் கலந்து கொண்ட தியாகி கள், ராஜரிஷிகள் எத்தனைபேர்? அவ்வளவும் கொண்டது இந்தியா. அந்த இந்தியாவை, இந்தியனாகப் பிறந்த ஒவ்வொருவனும், இந்தியன், இந்தியன் என்ற பெருமைகொண்டு, உலகத்தில் இகழ்ச்சியைப் போக்க முயலுவ தற்கு ஆதாரமானவை அவ்வளவு பாரதி பாடல்களும். அனைவரும், படித்து பாடி, படிப்பித்து பாடுவித்து, கேட்டு, கேட்பித்து எல்லாரும் இன்பநிலை யெய்த அன்னை பாரத சக்தி அருள் புரிவாளாக.

உன்னத ஆரிய நாடெங்கள் நாடே!
ஓதுவம் இஃதை யெமக்கில்லை யீடே!!

---




# பிளாரன்ஸ் நைட்டிங்கேல்

—:0:—

(M. A. S. முத்துசாமிப் பிள்ளை.)



இன்னும் அறப்பணி மாதர் தம் நாட்களைக் கழித்த விதத்தினைக் கூறுவோம். அதிகாலையில் படுக்கை விட்டகல்வர். அறைகளை நேர்த்தியாக வைப்பர், அடுக்களையில் சென்று சிறிது புளித்த அப்பமும், பாலிலாத் தேத்தண்ணீரும் அருந்துவர். அப்புறம் அங்குள்ளவர்கட்குக் குவாக்கிழங்கும் தேயிலை நீரும் ஆக்குதல் வேண்டும். இராப்பணி மாதர் இளைப்பாறச் செல்லும் பொழுது பகற்பணி மகளிர் தம்பணி ஆற்றிடுவர். அவர் வந்து வைத்தியசாலை புகுந்து பரிபாலிக்க வேண்டிய பல பாகங்களிலும் சென்று, கழுவுதல், கட்டுதல், உடுத்தல், உணவூட்டல், வைத்தியர்களிடத்தில் நோயின் தன்மையை எடுத்துக் கூறல் முதலிய பல தொழில்களையும் 9-30 மணி முதல் 2 மணி வரை ஓயாது தொண்டு புரிவர். இரண்டு மணிக்கு நோயாளிகள் இளைப்பாறவும் தூங்கவும் விடப்படுவர். அப்பொழுது மாதர்கள் தங்கள் மத்தியான உணவுக்கு அமர்ந்திடுவர். அவர்கள் விரும்பினும், விரும்பாதிருப்பினும் அவர்க்குக் கிடைப்பது ஒரு தட்டு மிதமான இறைச்சியும் ஒருவிதப் பானகமுமே. அதனை உண்டபிறவே அவர்க்கு உரிய கடமையென எண்ணினர். மூன்று மணிக்கு அவர்களில் சிலர் வெளிச் சென்று சிறிது உலாவி வருதல் உண்டு. ஆனால் அந்த நவம்பர்த்திங்களில் கிரிமியாவில் போலவே ஸ்குட்டாரியிலும் அடிக்கடி மழை அதிகமாயிருந்தது. அந் நாட்களில் சளி பிடிக்காது மாதர் நைட்டிங்கேல் ஜாக்கிரதையாயிருப்பள். அதனால் மாதர்களெல்லாம் தங்கியிருப்பது மருத்துவ சாலையே. அங்கு ஏதாவது வேலை எப்பொழுதும் செய்வதற்கு இருந்துகொண்டேயிருக்கும். பலக்குறைவாயிருக்கும் பிணியாளர்களுக்கு அடிக்கடி உணவு ஆக்க வேண்டியதிருந்தது. ஐந்தரை மணிக்கு அறமகளிர் அவ் வறைகளை விட்டுத் தேயிலை நீர் அருந்திடச் செல்வர். ஆனால் அது அதிக நேரம் ஆவதில்லை. இரவுக்கு வேண்டிய எல்லாச் சௌகரியங்களுடனும், அவர்கள் திரும்பி வருவர். இராப்பணி மாதர் இரவு 9-30 மணிக்குத் தங்கள் வேலையைத் தொடங்குவர்.

இவ்வாறு செய்து வந்தது ஒரு கடினமான காலங்கழித்தலாக இருந்தது. தங்களுடைய சொந்த உணவே அவ்வளவு சீர்கேடான நிலைமையிலிருந்த தென்பதை நோக்க, அவர்களில் எவரும் அவ்வளவு காலம் பொறுத்திருக்கக் கூடுமென்பது அதிவியப்பே. அதிலும் எங்ஙனம் அதனை அவ்வளவு தூரம் கொண்டு செலுத்தினர் என்பது அதிசய முடைத்தே. பணி மாதர் வேலை மிகப் பளுவானதே யாயினும், அதனுள்ளும் தலைமை மாதர் வேலை மிகப் பெரிதும் சிரமமானதே. அதிலும் எல்லாக் காரியங்களுக்கும் பொறுப்புடையார் அம் மாதர் நைட்டிங்கேலே. யோசிக்க வேண்டியது, திட்டம் அமைக்க வேண்டியது, இன்னும் நேர விருப்பவைகளை முன்னோக்கி எதிர் பார்த்திருப்பது எல்லாம் அவளே. எல்லா விபரங்களையும் பற்றி இங்கிலாந்திலுள்ள அமைச்சர் சிட்னி ஹெர்பர்ட்டுக்கும் கிரிமியாவிலுள்ள சேனைப் பெருந்தலைவர் ராக்ளன் பிரபுவுக்கும் செய்தி தெரிவிப்பதும் அவளே. சேனையிலுள்ள வேலைக்காரர்களெல்லாம் அவளுக்குச் செய்ய வேண்டிய உதவியை விருப்பத்தோடும் செய்தனராயினும், அவர்கள் செய்ய வேண்டிய வேலைக்குரிய பயிற்சியைப் பெற்றுச் சீர்திருந்தினவர்களல்லர். தலைமை மாதரோ, பிறரைப் பழக்குவதில் காலத்தைக் கடத்துவதைவிடத் தானே அக் காரியங்களைச் செய்வது விரைவிலும் எளிதிலும் அலைவ முடிவதற்கு வழி எனக் கண்டாள். ஆண் பெண் இரு பாலாரிலும் அவரவர் எந்தெந்த வேலைக்கு உபயோகப் படுவரென்பதை அவள் தீவிரமாகத் தெரிந்து விடுவாள். ஆகையால் அதற்குத் தகுதியானவர்களை அந்தந்த வேலையில் அமர்த்தி வைத்தனள். ஆதலினால் பொழுதை அவமே போக விடுவதற்கில்லை இங்கிலாந்திலிருந்து வந்து இறங்கிய பொழுதிருந்த பயங்கரமான காட்சி மாறி, மிகச் சுருங்கிய காலத்தில் அவ் வைத்தியச் சாலை, பெரிதும் ஒழுங்கு அமைக்கப் பெற்றதாயும், சௌகரியம் வாய்க்கப் பெற்றதாயும் ஆகித் திகழ்ந்தது. கவனம் செலுத்தப்பட வேண்டியவர்கள் போர் வீரர்கள் மாத்திரமன்று. அவர் பெண்டிர் பிள்ளைகளும் கூட அங்கிருந்தனர். அவர்களைப்பற்றி நினைப்பவர்களின்றி ஊண் உடை கிடைப்பதரிதாய் ஒவ்வோர் பக்கங்களில் ஒதுங்கிக் கிடந்தனர். மாதர் நைட்டிங்கேல் தமது உடை ஒலி சாலைகளிலும், வேறு பலவிடங்களிலும் அப் பெண்டிர்களுக்கு அலுவல் அமர்த்தி வைத்தினள். ஒவ்வொரு நாளும் பல மணி நேரம் குழந்தைகள் ஓதுவதற்கு ஒழுங்கு ஏற்படுத்தி இருந்தனள். ஆகவே அவர்களின் தாய்மார்களெல்லாம் தாராளமாகத் தங்கள் ஆதாரத்திற்காகச் சம்பாதிப்பதற்குச் செல்லத் தடையிலா திருந்தது. கணவனை இழந்த கைம்பெண்டிரை யெல்லாம் உடையும் பணமும் உதவி ஊர்க்கு அனுப்பி வைத்தனள்.

ஒருநாட் காலை தலைமை மாதர் தாம் சுற்றி வருகையில் முன் போலல்லாது அவள் முகத்தில் ஓர் ஒளி பிறங்குதலை அங்குள்ளவர்கள் யாவரும் நன்குணர்ந்தார்கள். ஏதோ ஒன்று அவட்கு மிகவும் இன்பம் விளைத்தது போல் தோன்றியது. மாலையில் எல்லோரும் மகிழ்வுடனிருக்கையில் அது என்ன வென்று அறியலாயினர். சமய போதகர் ஒருவர் வைத்தியசாலையின் பகுதி ஒவ்வொன்றிலும் சென்று விக்டோரியா மகாராணியாரிடமிருந்து ராபோர் அமைச்சர் சிட்னி ஹெர்பர்ட்டுக்கு வந்த கடிதம் ஒன்றை வாசித்து வந்தார்.

அது வருமாறு:—

## ஆங்கில அரசியார் அரிய கடிதம்

விண்ட்ஸர் மாளிகை.
6. டிசம்பர் 1854.

மகளிர் நைட்டிங்கேல் அல்லது மாதர் பிரேஸ் பிரிட்ஜ் இருவரிடமுமிருந்து மாதர் ஹெர்பர்ட்டுக்கு வரும் விபர அறிக்கைகளை அடிக்கடி நான் பார்ப்பதற்கு அனுப்புவிக்க வேண்டுகின்றேன் என்பதை மாதர் ஹெர்பர்ட்டுக்குத் தெரிவிக்கவும். போர் நிகழ்ச்சியையும் போர்க்களத்தையும் பற்றி அதிகாரிகளிடமிருந்து பெரிதும் கேள்விப்படுகிற எனக்கு, போரில் புண்பட்டவர்களைப் பற்றிய விபரம் புகலுவாரைச் சிறிதும் காண்கிலேன். இயற்கையில் அதைப் பற்றியன்றோ அறிய அக்கரை எனக்கு மிக்கிருக்கும்.

சிதைவுண்டு சீக்காய்க் கிடக்கும் மனிதர்களாகிய அந்த இரக்கம் பாலிக்கப்பட வேண்டிய நிலைமையிலுள்ள சிறந்த போர் வீரர்களிடம் அதிகக் கவலையுடன் சிரத்தை யெடுப்பவரும், அவர்களுடைய வருத்தங்களுக்காக அதிகம் வருந்துபவரும், அவர்களுடைய தைரியத்தையும் வீரச் செயல்களையும் தக்கவாறு போற்றுபவரும் அவர்களின் அரசியைப்போல் வேறு ஆளிலையென அவர்க்குரைக்குமாறு, மகளிர் நைட்டிங்கேலையும், மற்றும் மாதர்களையும் நான் விரும்புவதாக ஹெர்பர்ட்டு மாதரார் தெரிந்து கொள்ளட்டும் எனவும், இரவும் பகலும் தம்மால் நேசிக்கப்படும் சேனைகளையே நினைந்து நிற்கின்றார் எனவும், அவ் வண்ணமே அவர் தம் உறவினரும் எனவும் அறியக்கடவர்.

விக்டோரியா.

அங்ஙனம் அதனைப் படித்து முடிந்ததும், "கடவுள் அரசியைக் காப்பாராக!" எனக் கழறினர்சமயபோதகர். அவ்வாறே அங்குள்ள வியாதியாளர்களும் தங்கள் ஆழ்ந்த குரலில் அரசியை வாழ்த்தினர்.

அறப்பணி மாதர் அடுத்த கூட்ட மொன்று ஆங்கில நாட்டினின்று அங்கு வந்திறங்கியது. அவர்கள் பாஸ்பரஸ் கரைமருங்கிலுள்ள மருத்துவ சாலைகளின் பணியை மேற் கொண்டனர். அவர்க்குத் தலைமையாய் அமைந்தவர் அம்மை ஸ்டான்லி. அவள் ஓங்கு புகழ்படைத்த வெஸ்டுமின்ஸ்டர் ஆலயத் தலைவரின் உடன் பிறந்த நங்கை. அக் குழாத்தில் தூய தொண்டியற்றலே தொழிலெனக் கொண்ட மகளிர் பகுதி ஒன்று. மற்றும் இவ் வேலைக் கெனவே கூலிக்காக அமர்த்தப்பட்டவர்கள் மற்றொரு பகுதி. ஐரிஷ் நாட்டிலுள்ள காருண்ணிய மாதர் குழாத்தினர் சிலரும் அதில் கலந்திருந்தனர். அவர்கள் தங்கள் அறமகளிர் (Nuns) ஆடை அணிந்து கொள்வதற்கு அனுமதிக்கப் பெற்றனர். ஆனால், அரசாங்க முறைப்படி உடைதரித் திருந்தவர்களைப் பார்த்தால் அது அதிசயமாகத் தோன்றும். சாம்பல் வர்ணமுள்ள தளர் வங்கியும், கம்பளிச் சட்டையும், ஊதா நிறமுள்ள மேலாடையும், அதில் குறுக்கே "ஸ்குட்டாரி வைத்தியசாலை" எனும் செவ்வெழுத்துக்கள் பொறிக்கப்பட்டனவுமாய ஆடைகளே அவர்கள் அணிந்திருந்தர். அவைகள் எல்லாம் ஒரே அளவாகவே

ஆக்கப்பட்டிருந்தன. ஆதலினால், வளர்ந்த மாதர்கள் குறுகிய உடைகளிலும், குட்டை மாதர்கள், நீண்ட உடைகளிலும் தோன்றுபவர்கள் போலிருந்தனர்.

இவ்வித விநோத உடைகளைத் தரித்து அவர்கள் வேண்டப்படும் இடத்தை அடைந்ததும், அவர்கள் எவ்வெவ்விடங்களில் அதிகமாய் வேண்டப்பட்டனரோ, அவ்வவ் விடங்களில் மாதர் நைட்டிங்கேலால் வெவ்வேறாக அமர்த்தப்பட்டனர். இப்பொழுது கொடிய பேதி நோய் கூற்றுவன் போலக் கொள்ளையாடிற்று. கிரிமியாவில் மழை கொடூரமான குளிராக மாறியது. அதனால் பனியால்தாக்கபட்ட வீரர்கள் பல நூற்றுக் கணக்காகக் கொண்டுவரப்பட்டனர். பெரும்பாலும் அவர்கள் ஆடைகள் கூட உறைந்து ஒட்டிக் கொண்டிருந்தனவாதலால், அவற்றை எண்ணெய் பதங் கொடுத்தே எடுக்க வேண்டியதா யிருந்தது. அவர்கள் துயரங்களைப் பற்றிய கதைகள் சொல்லொணாப் பயங்கரமானவை. ஆனால் எவரேனும் ஒரு சிறிதேனும் முணுமுணுத்தது கிடையா. அவர்கள் நோவை நீக்க எடுத்த முயற்சிகளுக் கெல்லாம் அவர்கள் நன்றியறி வுணர்ச்சி யுடையவர்களாகவே இருந்தனர். மரணத் தருவாயி லிருந்தவர்களுக் கெல்லாம் மாதர் நைட்டிங்கேல் அவர் மருங்கிருந்து அவர்களுடைய கடைசி விருப்பங்களைக் கவனித்து வந்தாள். வசந்தகால முழுவதிலும் விஷபேதி வாட்டிக் கொண்டேயிருந்தது. பணி மாதரிற் சிலர் உணவுக் குறைவினாலும், உள்ளமும் உடலும் நெருக்கடியினால் ஒருங்குதாக்கப்பட்டன ராதலாலும் உயிரிழந்தனர். அவர்களில் ஒருவர் அம்மை நைட்டிங்கேலின் அரிய நட்பைப் பெற்றவள். ஏனையோர்களிற் பலர் பாலக்கிளவாவில் பணி செய்து வந்த ஐரிஷ் நாட்டு அறப்பணி மாதர்கள். அவர் உடலிடப்பட்ட குழிகளை யெல்லாம் போர்வீரர்கள் பூந்தருக்கள் நாட்டிப் பொலிவுபெறச் செய்தனர். ஆகவே, தலைமை மாதர் 1855 மே மாதம் கிரிமியாவிலுள்ள வைத்திய சாலைகளைப் பரீட்சிக்கச் சென்ற பொழுது அவைகளைப் பார்வையிட்டனள். 'அமைதி கிடைக்கும் ஒவ்வொரு கணமும் அவர்தம் கடமையினின்றும் வழுவினவராவர்? என்னும் உணர்ச்சியை நீக்கி, ஓய்வுற்று, கப்பல் மேல் தட்டிலமர்ந்து கருங்கடல் தண்ணீரைக் கவனித்த வண்ணமா யிருத்தல் எவ்வளவு களிப்பினை நீக்கும். அவளுடன் சில அறப்பணி மாதரும் அங்கிருந்தனர். பின்னும் அவள் தன் நண்பர் பிரேஸ் பிரிட்ஜ் அவண் வைகினர். அவருடைய மனைவி பிரேஸ் பிரிட்ஜ் மாதரே ஸ்குட்டாரியிலுள்ள பண்டகசாலைப் பொறுப்பை வகித்திருந்தவர். அங்கு பன்னிரண்டாண்டுப் பருவமுடைய தாமஸ் என்னும் தமுக்கடிக்கும் பையன் ஒருவனும் உடனுறைந்து வந்தான். அவனுடைய இயற்கையே அடிக்கடி ஒவ்வொன்றிலும் தமாஷ் விளைத்துப் பொழுது போக்குவதற்கான விநோதச் செயல்களைப் புரிந்து மகிழச் செய்வான். அவர்கள் மயக்கமுற்றுத் தோன்றும் பொழுது அவர்களிடம் மனவெழுச்சியை வருவிப்பான்.

(தொடரும்.)

---




# “ஹஹ்ஹா” “ஹூம்...ஹூம்...”

———:(0):———

(“ரா. சந்தானம்.”)



எனது நண்பன் சாம்பு தங்கமான மனிதன்தான். ஆனால் அவனிடம் ஒரு கெட்ட பழக்கமிருந்தது. எந்த சினிமா பார்த்தாலும் அதை ரூமில் நடித்துக் காண்பிக்க ஆரம்பித்து விடுவான். நாங்களிருவரும் ஒரே கலாசாலையில் படித்துக் கொண்டிருப்பவர்கள். நான் சாப்பிடுகின்ற ஹோட்டலிலிருந்த என்னுடைய அறைக்கு அடுத்தது அவனுடையது. தினமும் ஒரு சினிமாவை நடித்துக்காட்டும் அவன் புஸ்தகமத்தியில் எப்போதும் தூங்கும் எனக்கு பண்ணிவரும் தொந்தரவு கொஞ்சநஞ்சமல்ல. ஆனால் என்ன செய்வது? சிநேகிதனல்லவா? பொறுத்துக் கொண்டுதானே யாகவேண்டும்.

ஒருநாள் காலேஜிலிருந்து அப்போதுதான் வந்த நான் கலாசாலையில் உபாத்தியாயர் தலையில் ஏற்றிய பாரத்தைத் தாங்காத என் சிரசானது உபத்திரவம் பண்ணவே சற்று கண்ணயர்ந்தேன். சாயங்காலம் மணி நான்கிருக்கும். சற்றுநேரம் தூங்க கொடுத்து வைக்கவில்லை. சுளீரென்று முதுகில் ஓரடி விழுந்தது. ஒரு பல்டி அடித்து எழுந்தேன். கண்ணைக் கசக்கிவிட்டுப் பார்த்தேன். யமதூதனைப்போல் நின்று கொண்டிருந்தான் மகாபாபி சாம்பு. குஸ்திக்குத் தயாரா யிருப்பவன்போல நின்றுகொண்டு ‘அட நீ நாசமாய் போக! என்னடா சமாசாரம்'' என்று கத்தினேன். அதற்கு பதில் பேசாது என் சட்டையையும் கோட்டையும் எடுத்துக் கையில்கொடுத்து மாட்டிக்கொள்ளச் சொன்னான். மின்சார சக்தியினால்வேலை செய்யும் இயந்திரம்போல அவன் சொன்னபடி செய்தேன். பிறகு பூட்டையும் சாவியையும் கையில் எடுத்துக்கொண்டு என்னை அறையினின்று அழைத்துச் (அல்லது இழுத்தும்) சென்றான். என் அறை பூட்டப்பட்டது. மாடியிலிருந்து கீழே இறங்கிய உடன் தன்னைப் பின்பற்றும்படி எனக்குக் கட்டளையிட்டான். அவன் கட்டளைப்படியே அவனைப் பின்தொடர்ந்து வெகு தூரம் சென்றேன். கடைசியில் ஓர் இடத்தில் நின்றான். அதுவரை புது நாட்டுப் பெண்ணைப்போல் தரையை ‘மெஸ்மரிஸம்' பண்ணிக்கொடுண் வந்தநான் நிமிர்ந்து பார்த்தேன். நான் ரங்கவிலாஸ் தியேட்டர் முன்பாக நின்று கொண்டிருந்தேன். அன்று அத்தியேட்டரில் ‘சத்யசீலன்' ‘‘ரிலீஸ்'' ஆகின்றது என்று காலையில் கலாசாலையில் சம்ஸ்க்ருத வகுப்பில் சுப்புசாமி என் காதில் முணுமுணுத்தது ஞாபகத்திற்கு வந்தது. சமாசாரம் வெட்ட வெளிச்சமாகி விட்டது.

சாம்பு எனக்கும் சேர்த்து டிக்கட் வாங்கினான். நாங்கள் ஒரு பொட்டலம் வெற்றிலைபாக்கு சண்முகம் பொடி இரண்டு மட்டை சகிதம் உள்ளே சென்றோம். ஆட்டம் ஆரம்பமாயிற்று. கதாநாயகன் தன் வீரதீரச் செயல்களால் என் நண்பனை மயக்கி விட்டான். ஓரிடத்தில் கதாநாயகன் குதிரையின் பின்புறத்தில் தலையை வைத்து குட்டிக்கரணம் அடித்து குதிரையின் மேல் "அதிசயத்திலு மதிசயமே' என்று எல்லோரும் கூறத்தக்கபடி ஏறுகிறான். மற்றொரு இடத்தில் தரையில் நின்று கொண்டிருந்தவன் மறுகணம் அறுநூறு அங்குலங்கள் உயரமுள்ள ஓர் உப்பரிகையில் காணப்படுகிறான். இதுபோன்ற பல தீரச் செயல்கள் (மாஜிக் வேலைகள்) நிறைந்திருந்தது அப் படம். ஆட்டம் முடிந்தவுடன் இருவரும் ஹோட்டலுக்கு வந்து சேர்ந்தோம்.

* * * *

நாங்களிருந்த ஹோட்டலுக்கு பக்கத்திலிருந்தது குதிரைவண்டிக்கார ராமசாமி வீடு. "வலங்கிமான்" குதிரை யென்ற பெயர் அவன் குதிரைக்குத்தான் தகும் வண்டியில் அதைப் பூட்டினவுடன் அரை பர்லாங் பின்னாலேயே ஓடும். பிறகு ராமசாமி சாட்டையால் சுளீர் சுளீரென்று இரண்டு அடி கொடுத்தவுடன் மேலே செல்லும். இந்த அபூர்வப் பிராணியை ராமசாமி கொல்லையில் கட்டி வைப்பது வழக்கம்.

ஞாயிற்றுக்கிழமை. மாலை மூன்று மணி யிருக்கும். காளிதாஸனுடைய குமார சம்பவத்துடன் யுத்தம் செய்து கொண்டிருந்தேன் நான். மறுநாள் சம்ஸ்கிருத பரீக்ஷை. அந்த சமயத்தில் வந்து சேர்ந்தான் சாம்பு. "ஏய்! சந்தானம்! வாயேன். ஒரு வேடிக்கை காட்டறேன்" என்று சொல்லி என்னை அழைத்துக் கொண்டு சென்றான். "இதேதுடா! கஷ்டகாலமாயிருக்கு" என்று நினைத்துக்கொண்டு அவன் கூடச் சென்றேன். இருவரும் ராமசாமி வீட்டின் கொல்லையை அடைந்தோம். ராமசாமி தூங்கிக் கொண்டிருந்தான். அவன் பெண்சாதி வம்பளக்கச் சென்று விட்டாள். ஆகவே வீட்டில் ஒருவருமில்லை யென்றே சொல்லலாம். சாம்பு, ராமசாமியின் குதிரையின் பின்புறத்திலிருந்த ஒரு கல்லின் மேலேறிக்கொண்டான். குதிரையின்மீது தலையைவைத்து குட்டிக்கரணமடிக்க ஆயத்தமாய் நின்றான். உடனே குதிரை கழுதையாகி விட்டது. இரண்டே உதைகள் தாம் கொடுத்தது. முதல் உதையில் சாம்பு கீழே உருண்டான். இரண்டாவது உதை அவனுடைய சொத்தைப் பற்களை பத்திரமாய் சற்று தூரத்திற் கப்பால் வைத்தது. இரத்தம் காலன் காலனாக வர ஆரம்பிக்கவே அவனை ஓர் வைத்தியரிடம் தூக்கிச் சென்றேன். அவனுடைய காயம் நன்றாய் ஆறிய உடன் அவனை "என்ன சமாசாரம்" என்று கேட்கவே, அவன் "சத்யசீலன்" கதா நாயகனைப் போல் நடித்ததால் இத் துன்பம் சம்பவித்தது என்று சொன்னான். "நல்ல சினிமா வந்து சேர்ந்தது" என்று தலையிலடித்துக் கொண்டே என் அறையை யடைந்தேன்.

பின்னொருநாள் இரவு ஏழு மணிக்கு உலவச் சென்றிருந்த நான் என்னுடைய அறையை அடைந்தேன். என் நண்பன் அறையிலிருந்து சந்தோஷ சப்தமும் அழுகை சப்தமும் மாறி மாறி வந்தன. அவனுடைய அறையில் ஏக கலாட்டாவாக விருந்தது. பல பேர்களுடைய குரல்கள்

எழுந்தன. விஷயம் என்னவென்று அறிய விரும்பி நான் அவனுடைய அறையை அடைந்தேன். நான் அங்கு கண்ட காட்சி என்னைத் தூக்கி வாரிப் போட்டது. என்னுடைய நண்பன் பழைய சட்டை ஒன்றைப் போட்டுக்கொண்டு அலங்கோலமாய் தொங்கும் தலை மயிருடன் விளங்கினான். யாராகிலும் அவனை அப்போது பார்த்தால் பயித்தியக்காரனென்று நிச்சயமாகச் சொல்வார்கள். "ஹஹ்ஹஹா" என்று இடியிடிப்பதைப் போன்ற சிரிப்பும் உடனே "ஹூம்.........ஹூம்......" என்ற அழுகைக் குரலும் அவனிடமிருந்து வெளிப்பட்டன. அறையிலிருந்தவர்களில் ஒருவர், என் நண்பன் கோட் பையில் கையை விட்டு ஒன்பதணா சில்லரைக் காகத் தேடிக் கொண்டிருந்தார். எதற்குத் தெரியுமா? "பயித்தியம் பிடித்துவிட்டதாக" தகப்பனுருக்குத் தந்தி அடிக்க. நல்ல வேளையாய் அப்பையில் ஒரு செல்லாத பைசா காசுகூட யில்லை. சாம்பு தன்னுடைய பர்ஸைப் பெட்டியில் வைத்துப் பூட்டியிருந்தான். அந்த ஒன்பதணா மட்டும் அவன் கையில் சிக்கியிருந்தால் நிச்சயம் தந்தி அடித்திருப்பான். ஒன்றுமில்லாததற்குப் பெரிய ரகளை ஆயிருக்கும். ஏனெனில் சாம்புவுக்குப் பயித்தியமில்லை என்று நிச்சயமாகத் தெரியும் எனக்கு.

சாம்புவினுடைய அறையிலிருந்த என் நண்பர்களனைவரையும் வெளியில் அழைத்துச் சென்று அவர்களிடம் சாம்புவுக்குப் பயித்தியமில்லையென்றும் மறுநாள் அவனைப் பயித்தியமில்லாதவனுகக் காண்பார்களென்றும் சொல்லி அனுப்பிவிட்டு என் சிநேகனறைக்குட்சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டேன். என்னைக் கண்டதும் சாம்பு "மடமானே மையலானேனே" என்று பாட ஆரம்பித்துவிட்டான். அவன் முதுகில் ஓர் பலமான அடி (முன்பு ஓர்நாள் என்னை அடித்ததற்காக வல்ல) கொடுத்தேன். அங்கிருந்த ஓர் நாற்காலியைக் காண்பித்து அவனை அதில் உட்காரச் சொன்னேன். அவனும் அப்படியே செய்தான். நான் உடனே அவனிடம் "ஏய்! சாம்பு! நான் சொல்றதைக் கேள். நீ இனி இம்மாதிரி கோட்டீஸ் கொடுக்காமல் சினிமாவை நடிக்கக்கூடாது. தெரியுமா?" என்று அதட்டிய குரலுடன் சொன்னேன். அதற்குள், நான் சமாசாரத்தை அறிந்துகொண்டேன் என்பதை அறிந்த சாம்புவினுடைய பயித்தியம் பறந்துவிட்டது. சாம்பு "எய் சந்தானம்! நாம் போன சனிக்கிழமை ராயல் டாக்கீஸில் விநாயக் நடித்த "திஸாங் அப் லைப்" பார்த்தோமல்லவா. அதில் கதாநாயகன் பயித்தியக்காரனைப் போல் நடித்தானல்லவா. அதை நான் நடித்துப் பார்த்தேன். இதனுல் என்ன குடி முழுகிப்போச்சு" என்றான். பிறகு நான் சாம்புவிடம் நானங்கு வந்திராவிடில் நேர்ந்திருக்கும் காரியங்களைச் சொல்லி அவனை நடிப்புக்கு லீவு கொடுக்கும்படி நோட்டீஸ் கொடுத்துவிட்டு வந்தேன். இந்த இழுவெடுத்த சினிமா நல்லதிற்கா கெட்டதிற்கா என்று நீங்களே பதில் சொல்லுங்கள்.



# பாகமுறை

(வீ. சங்கரய்யர்.)

பெண்களுக்குச் சமையல் செய்யத் தெரியவேண்டியது அவசியம். மாதிருத்வ விஷயம் குடும்ப நிர்வாகம் முதலியவைகளும் நன்கு அவர்கள் தெரிந்திருக்க வேண்டியது வெகு முக்கியம். இவ் விஷயங்களைப் பெண்களுக்கு பாடசாலைகளில் கற்பிக்கவேண்டும். பொதுவாக நமது பெண்களின் உபயோகத்துககாகவே இப் பகுதி இங்கு எழுதப் படுகிறது.

ஆகார பதார்த்தங்களை மூன்றுவிதமாகப் பிரிக்கலாம்.

## (1) சத்வப் பிரதானமானவை

அரிசி வகைகள், கோதுமை, வாற்கோதுமை, தினை, உழுந்து, பயறு, பொரி, அவல், எள்ளு, சுக்கு, இஞ்சி, மிளகு, சீரகம், வெந்தயம், சர்க்கரை, வெல்லம், கற்கண்டு, தேன், திராக்ஷை, பேரீச்சை, ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், ஜாதிபத்திரி, வால்மிளகு முதலிய வாசனைச் சரக்குகள் நல்லெண்ணெய், தேங்காய் எண்ணெய், பால், தயிர், நெய், வெண்ணெய், பாகற்காய்,கத்திரி, வாழை, பலா, விளா, இலந்தை, மா, நாரத்தை, மணத்தக்காளி, சுண்டை, தென்னை, நெல்லி இவைகளின் காய்களும் பழங்களும், சேம்பு, சேனை, தாமரை, கருணைக்கிழங்குகள், கீரை, வாழை, பிரண்டை இவைகளின் தண்டு, கரிவேப்பிலை, கீரை, தூதுவிளை,முன்னை, முசுட்டை, வெந்தயம், மல்லி, மணத்தக்காளி, அகத்திக்கீரைகள். இவை போன்றவை.

## (2) ரஜோகுண முடையவை

சாமை, சவ்வரிசி, துவரை, கடலை, நிலக்கடலை, மஞ்சள், காயம், புளி, மிளகாய், உப்பு, கடுகு, மல்லி, ஓமம், பாக்கு, வெள்ளாட்டுப்பால், தயிர், வெண்ணெய், நெய், புடலங்காய், வெண்டைக்காய், பூசணைக்காய், அத்திக்காய், எலுமிச்சம்பழம், புளியங்கொழுந்து, வாழைப்பூ இவை போன்றவை.

## (3) தமோகுண முடையவை

புழுங்கலரிசி, கேழ்வாகு, கம்பு, சோளம், பட்டாணி, கொள்ளு, பனை வெல்லம், எருமைப்பால் வகையறு, அவரை, மொச்சை, பீர்க்கு, முருங்கை, சுரை வள்ளிக்கிழங்கு, பனங்கிழங்கு, உள்ளி, முருங்கைக்கீரை, புளிச்சக் கீரை, சோற்றுக்கத்தாழை, நொங்கு, கள்ளு இவை போன்றவை.

ஸத்வகுணப் பிரதான பதார்த்தங்களை யுண்பவர் ஸத்வகுண முடையவர்களாக யிருப்பார்கள். அதுபோல ரஜோகுண பதார்த்தங்களை யுண்பவர்கள் ரஜோகுண முடையவர்களாகவும், அப்படியே தமோகுணப் பதார்த்தத்தை யுண்பவர்கள் தமோகுண முடையவர்களாகவும் இருப்பார்கள்.

## A. பாயச தினுசுகள்

### (1) அரிசிப் பாயசம்

2 படி பிடிக்கும் பாத்திரத்தில் 1 படி ஜலம் விட்டு கொதி வரும் பொழுது $\frac{1}{8}$ படி அரிசி, 1/16 படி கடலைப்பருப்பு போட்டு வேகவைத்து, $\frac{1}{4}$ படி பால் (தேங்காய்ப்பால் விசேஷம்) விட்டு நன்றாகக் கொதிக்கும் பொழுது 10 பலம் (1 பலம் 6 ரூபாயிடை) வெல்லம்போட்டு நன்றாகக் கிளறி யிறக்கி ஏலப்பொடி போட்டு, வேண்டுமானால் முந்திரிப்பருப்பு, வாதாம்பருப்பு தேங்காய்க்கீற்று இவைகளையும் நெய்யில் வறுத்துப் போடவும்.

குறிப்பு:—தேங்காய்ப்பால் விடுவதானால் சுத்தப்பாலை இரக்கு முன்னும், இரண்டாம்பாலை மேலே சொன்னபொழுதும் விடவேண்டும்.

### (2) சேமியாப் பாயசம்

3 படிப் பாத்திரத்தில் 1 படி ஜலம்விட்டு கொதி வரும்பொழுது நெய்விட்டு வறுத்த 5 பலம் சேமியாவைப் போட்டு வேகவைத்து கீழே யிறக்கி கூட ஒரு படி ஜலம் விட்டு ஆற வைக்கவும். ஒரு படிப் பாலை தண்டாக 15 பலம் ஜீனிபோட்டு நன்றாகக் காய்ச்சவும். சேமியாவிலுள்ள தண்ணீரை இறுத்துவிட்டு அதை இப்பாலில் போட்டு காய்ச்சவும். பிறகு முன்போல் ஏலரிசி வகையறா போடவும்.

### (3) சேமியா செய்யும் விதம்

$\frac{1}{4}$ படி கோதுமை நொய்யை தாம்பாளத்தில் போட்டு தண்ணீர் விட்டு நன்றாகப் பிசைந்து பிறகு ஒருமணி நேரம் ஊறவைத்து அம்மியில் அப்பளமா இடிப்பதுபோல இடித்து பதப்படுத்தி நெய் 1/16 படி விட்டு திருப்பியும் இடித்து அதை ஈர்க்குக் கம்பிபோல் இழுக்கவும். பின் உலற வைத்து எடுத்து வைத்துக்கொள்ளவும். இதுவே சேமியா செய்யும் விதம். கடையிலுள்ளதை வாங்கவேண்டிய தேவையில்லை. நாமே சுத்தமாக தயாரிக்கலாம்.

### (4) வேறோரு வகை சேமியா பாயசம்

3 படி பிடிக்கும் பாத்திரத்தில் 2 படி பால்விட்டு சுண்டக்காய்ச்சி அதில் 1/16 படி நெய்விட்டு வறுத்த சேமியா போட்டு அது தடிப்பானதும் 18 பலம் சீனி போட்டு ஏலம் வகையறா சேர்க்கவும். குங்குமப்பூவும் ஜாதிக்காய் ஜாதிபத்திரியும் பொடி செய்து போடலாம்.

## (5) கடலைப்பருப்புப் பாயசம்

2 படி பிடிக்கிற பாத்திரத்தில் ¾ படி ஜலம்விட்டு கொதிக்கும் பொழுது ⅛ படி கடலைப்பருப்பு போட்டு வெந்ததும் ½ படி பால்விட்டு நன்றாகக் கொதித்ததும் 15 பலம் சர்க்கரை போட்டு முன் கூறியபடி ஏலப் பொடி முதலியவை போடவும்.

## (6) பயற்றம்பருப்புப் பாயசம்

2 படிப் பாத்திரத்தில் ¾ படி ஜலம்விட்டு ⅛ படி வறுத்த பாசிப் பருப்பு போட்டு வெந்ததும் ¼ படி பால் 15 பல சர்க்கரை போட்டு கடலைப்பருப்புப் பாயசம் மாதிரிச் செய்யவும்.

## (7) பால் பாயசம்

3 படிப் பாத்திரத்தில் 2 படி பால்விட்டு கொதித்ததும் 1/16 படி நெய்விட்டு வறுத்த ¼ படி அரிசியை போட்டு நன்றாக வேகவைத்து பின் 18 பலம் ஜீனி போட்டு கிளறி இறக்கி முன்போல் ஏலரிசி வகையறா போடவும்.

குறிப்பு:—(a) அரிசியை வறுக்காமலும் போடலாம் (b) அரிசிக்குப் பதிலாக கோதுமை அல்லது கோதுமை நொய்யும் போடலாம்.

## (8) பால்போளி பாயசம்

⅛ படி கோதுமை நொய்யை பால்விட்டு பிசைந்து ஒரு மணி ஊறிய பிறகு சேமியாவுக்கு இடித்ததுபோல் இடித்து அப்பளா மிட்டு அதை நெய் யில் பொறிக்கவும். பிறகு 3 படிப் பாத்திரத்தில் 2 படி பால் விட்டு பால் பாதி சுண்டியதும் 18 பலம் சர்க்கரை போட்டு பிறகு அந்த அப்பளத்தை போட்டு இறக்கி அதோடு ½ பலம் பாதா, ½ பலம் முந்திரிப்பருப்பு, ½ பலம் கசகசா ½ பலம் தேங்காய்க்கீற்று இவைகளை வறுத்துப் போடவும்.

## (9) கோதுமைநொய் பாயசம்

3 படிப் பாத்திரத்தில் 1½ படி ஜலம் விட்டு கொதிக்கும் பொழுது ⅛ படி கோதுமை நொய்யை 1/16 படி நெய்விட்டு வறுத்துப் போட்டு கிளறி கட்டி கட்டாமல் பார்த்துக் கொள்ளவும். ½ படி பால்விட்டு 9 பலம் சீனி சர்க்கரை போட்டு ஏலம் வகையறாப் போடவும்.

## (10) பழப் பிரதமன்

3 படி பிடிக்கும் பாத்திரத்தில் ⅛ படி நெய்விட்டு 25 வாழைப் பழத்தை உரித்துப் போட்டு அது முங்கும்படி ஜலம் விட்டு அடுப்பிலேற்றி கொதிக்கும்பொழுது காண்டியால் மத்திக்கவும். ஜலம் சுண்டி லேகிய பதமானதும் எடுத்து வைத்துக்கொள்ளவும்.

(a) தனித்தேங்காய்ப்பால் அதாவது முதல் பால் 1 படி,
(b) இரண்டாம்பால் தண்ணீர்விட்டு அரைத்து எடுத்தது 1½ படி.
(c) மூன்றாம்பால் 2 படி.

மூன்றும்பால் 2 படியை ஷை பாத்திரத்தில் விட்டு 30 பலம் சர்க்கரை போட்டு வாழைப்பழ லேகியத்தைப் போட்டு மசித்து கொஞ்சம் நன்றாக சுண்டினதும் $1\frac{1}{2}$ படி இரண்டாம் பாலைவிட்டு கிளறி நன்றாக சுண்டினதும் இறக்கி முதல் பாலை 1 படி விடவும். பிறகு தேங்காய் முதலியவற்றை நெய் யில் வறுத்துப் போடவும்.

குறிப்:—பழ லேகியத்தில் 30 பல சர்க்கரை போட்டு நீரில்லாமல் சுண்டி ஒரு மாதகாலம் வைத்திருந்தாலும் கெடாது. அப்போதைக் கப் போது பாயசம் செய்ய உபயோகப்படுத்தலாம்.

### (11) பலாப்பழப் பிரதமன்

பழப் பிரதமனைப்போலவே செய்யவும்.

### (12) அடைப் பிரதமன்

அரிசியை ஊறப்போட்டு அரைத்து வாழை யிலையில் தடவி மடக்கி ஆவியில் வேகவைத்து வெந்தபின் எடுத்து இலையிலிருந்து அடையை எடுத்து இந்த அடையை பிறகு பழப் பிரதமன்மாதிரிச் செய்யவும்.

### (13) அவல் பிரதமன்

சேமியாப் பாயசம் மாதிரி செய்யவும்.

### (14) செவ்வரிசிப் பாயசம்

சேமியாப் பாயசம் மாதிரியே.

## B. சர்க்கரைப் பொங்கல்கள்

### (1) சர்க்கரை இளம்பாகு செய்யும் விதம்

1 படி சீனிக்கு முக்கால்படி தண்ணீர் விட்டு கலந்து கால் கொதி வந்ததும் அதைத் துணியால் வடிகட்டி பிறகு மறுபடியும் அடுப்பில் வைத் துக் கிண்டவும் $\frac{1}{8}$ படி பாலும் $\frac{1}{8}$ படி தண்ணீரும் கலந்து காய்ச்சி அதை அப்பாகில் தெளிக்க அழுக்கு மேலே வரும். அழுக்கை எடுக்கவும். மறு படியும் தெளிக்கவும். இப்படி அழுக்கு எடுக்கவும். பிறகு பாகைத் தண்ணீ ரைத் தொட்டுக்கொண்டு ஆள்காட்டி விரலிலெடுத்து பெருவிரலில் தொட்டு இழுக்க சுமார் ஒரு அங்குலக் கம்பிவந்தால் அதுவே இளம் பாகு.



# ஞானசிந்தாமணி



(ஸ்ரீ காசி நீலகண்ட சுவாமிகள்.)

### சூத்திரதருமம்

பிராமணாதிவர்ணத்திரயசேவை க்ஷேத்திர ரக்ஷை சகல தேவதாபத்தி முதலான கர்மயுக்தனானவன் சூத்திரன்.

### ஆச்சிரமம்.

பிரமசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசமென ஆச்சிரமம். 4.

### அஷ்டாதசபுராணம்

பிரமம், பதுமம், விஷ்ணு, சைவம், பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கிநேயம், பௌஷ்யம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம், ஸ்காந்தம், வாமநம், கூர்மம், மச்சியம், காருடம், பிரமாண்டம் எனச் சிவப்பிரசாதத்தால் வியாசரிஷி ஈசுவரர் சொன்ன வேத நிஷ்டசாரார்த்தப் பிரதிபாதகமான நாலுலக்ஷஞ் சங்கியையுள்ள அஷ்டாதச புராணங்களில் ஸ்காந்த, இலிங்க, கூர்ம, வாமந, வராக, பௌஷ்ய, மச்சிய, மார்க்கண்டேய, பிரம்மாண்ட மென்னுமிவை 10-ம் சிவபுராணம். நாரதீயம், பாகவதம், காருடம் விஷ்ணு வென்னுமிவை, 4-ம் விஷ்ணுபுராணம். பிரமம், பதுமம் என்னுமிவை 2-ம் பிரமபுராணம். பிரமகைவர்த்தம்-சூரியபுராணம் ஆக்கிநேயம்.அக்கிநிபுராணம், இந்த ஏற்றற்றாழ்வினாலேயே தேவதாதாரதம்மியமு மறிந்துகொள்க.

### சர்க்காதிபஞ்சலக்ஷணம்.

இந்தப் புராணங்களில் - சர்க்க - பிரிதிசர்க்க, வங்கிச, மநுவந்தர, வங்கிசாநுசரிதம் என்னும் பஞ்சலக்ஷணங்களும், வைதிக, தாந்திரீகர்மமுஞ் சொல்லும்.

### உபபுராணம்.

சநற்குமாரம், நாரசிங்கம், நந்தி, சிவதருமம், துர்வாசம், நாரதீயம், கபிலம், மாநவம், உசநம், பிரம்மாண்டம், வாருணம் காளி, வாசிஷ்டலைங்கம், சாம்பவம் சௌரவம், பராசரம், மாரீச்சியம், பார்க்கவம் என்னுமிந்த நாமதேயமுள்ளவர்களால் நிர்மிதமான அஷ்டாதசவுப புராணம், வைதீக தர்மமே பிரதிபாதிக்கும்.

### இதியாசம்.

பாரத இராமாயணாதிகள் வியாச வான்மீகாதிகளாலுண்டான இதியாசங்கள், சத்துவாதி குணபேதங்களும், தேவத்திரயலக்ஷணங்களும், தேவதான வாதிகள், சநகக்கிரமமும், யுதிஷ்டிர ராமச்சந்திராதிகள் சரித்திரங்களும், வைதீகாதி தர்மங்களும், திரிகரிக்துச் சொல்லும்.

### அவைதிகசாஸ்திரத்திரயம்.

இதற்குமேல், பிரகஸ்பதி, ஆகித, சுகதரென்னு மிவர்களால், கிரமத்திற் சொல்லப்பட்ட - சாருவாக - ஜைந - பௌத்தமென அவைதிக சாஸ்திரத்திரயமுண்டு. அவற்றுள் - சார்வாகமாவது - பிருதிவியாதி சதுர்வித பூத விகாரமான சகத்துள், சுகமே சுவர்க்கம் - துக்கமே நரகம் - இவையன்றி வேறே சுவர்க்க நரகமில்லை யென்று பிரதிபாதிக்கும்.

சைநமாவது-சித்த, பத்த, நாரகீகளென்னும் புருஷத்திரய லக்ஷணங்களையும், ஓட்டீச - ஓட்டாமிலேச, சுவாலிநகற்ப, பதுமாவதிகற்ப, சாரதாகற்ப - குக்குடனுதி கற்பாதிகளையும், மந்திரௌஷதாதிப் பிரியோத்திருக்களான பரமசித்தர்களையும், லூநகேச, திகம்பர, பாணிபாத்திர, மயூரபிஞ்ச, பஞ்சமலதாரணுதிகளின் கொலே, களவு, கள், காமம், பொய்களில்லையான பஞ்சாநு விரதங்களில் மதுக, பலண்டு, முதலான நிஷேததிரவியங்களை வர்ச்சித்து, தப்தசிலாசயனுதி உக்கிரதபசாசரிக்கிற முனிவிருத்திகளையும், எமசந்திர, நாகசந்திர, நேமிசந்திர, எகிசந்திர, மாகசந்திர, அருகந்த-- ஆதிநாத - அசகள - பாரீஸ்வநாத - சௌகத -- சுருதிகீர்த்தி - ஸ்ரீமத் காமரகித முனிசுவாமி முதலான (24) தீர்த்தகருடைய சரித்திரங்களையும், சாதாஸ்தி, சாதாநாஸ்தி முதலான சத்தபங்கிகளையும், ஜீவ, சற்ஜீவ, நிர்ச்ஜீவ, நிர்ச்சர, ஆசீர்வ, பந்தமோக்ஷமென்னும் சத்த பதார்த்தங்களையும், பிரதிபாதிக்கும்.

பௌத்தமாவது சௌத்திராந்திகம், வைபாடிகம், யோகாசாரம் மாத்தியமிகமென நான்கு பிரகாரமாய் பிருதிவியாதி புத்தி யாந்தமான (23) தத்துவாத்மகமான பிரபஞ்சம், தீபச் சுவாலையைப்போல க்ஷணிகமாத்திரமென்று பிரதிபாதிக்கும்.

இதற்குமேல் நிஷேதகர்ம சாஸ்திரங்களுண்டு. அவை-சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர், என்னும் நவநாத சித்தர்களால் கற்பிதமான- கௌள யாமளாதி-இம்சை மைதுநாதி-நிஷேதகர்மமுள்ள சாஸ்திராந்திரங்கள், அபிசார கர்ம சநிதவியாதியாதியால், அகாலமிருத்திரூபமான மாணசுழுத்தி விஷமூர்ச்சாதிரூபமோகநமும், அக்கிநிஸ்தம்பனே, ஜலஸ்தம்பனே, இந்திரிய ஸ்தம்பனே, கட்கஸ்தம்பனே சிங்வைஸ்தம்பனே. கதிஸ்தம்பனுதி ஸ்தம்பனமும், பூர்வசுகாசிரம நிரசநாத்மகமான-உச்சாடணமும், வஸ்திராபரண வநிதாதி வஸ்துக்களை நிஜஸ்தானத்திலிருந்து அழைப்பிக்கும் ஆகருஷணமும், பிராண சிநேகமான இடத்தில் அந்நியோந்நிய விரோதமுண்டாக்குகிற வித்வேஷணமுமான, ஷட்கருமங்களையும், ராஜவசியாதிவசியங்களையும், சுராசுர பூதக்கிரகாவேசங்களையும், பாதுகாசித்தி, அஞ்சநாசித்தி, குடிகாசித்தி-மூலிகாசித்தி, ரசவாதங்களையும் பிரதிபாதிக்கும்.

சாக்தீகபாஞ்சராத்திரம்.

இதற்குமேல், சத்திதத்துவவாசி யென்னும், ஒரு ஆத்துமனுலும், வாசுதேவனுலும் கிரமத்தில் பிரதிபாதிக்கப்பட்ட அநுக்கிரமத்தில் சாக்தீகம்-பாஞ்சராத்திரமென சாஸ்திராந்தாத்துவயமுண்டு. அவற்றுள்-சாக்தீகம்-சடாசடப்பிரபஞ்சமெல்லாம் சத்திபரிணுமமென்பது முதலாக மதவிஸ்தாரஞ் செய்யும்.

பாஞ்சராத்திரம். பிருதிவியாதியான சாந்தமான சதுர்விம்சதி தத்துவத்திக்கு மேல் குணதத்வாத்மக வாசுதேவனுல் சக்திதாதாத்மீகமாயுண்டான கிருஷ்ண. அநிருத்த-மகாத்துவச-ரௌகிணேயரென்னும் நால்வர ஆற்பத்தி முதலான கிருத்திய மென்று பிரதிபாதிக்கும். இதன்மேல் லௌகிக-வைதிக-ஆத்தியாத்மக-ஆதிமார்க்கிக-மாந்திரிகமென பஞ்சவித சாஸ்திரங்களுண்டு-அவற்றுள். (தொடரும்.)




ஒரு பெருத்த உடலோடு கூடியவரும் ஒரு எலும்பு மனிதருமாக ஆப்பிரிக்காவிற்குப் போயிருந்தனர். அங்கு ஒரு ஏரியில் ஏதோ ஒரு மிருகம் இருப்பதை அப்பெரியவர் பார்த்து ஏது! அது யானை மாதிரி தோன்றுகிறதே என்றார்.

உடனே அவ்வெலும்பு மனிதர்:— ஆம்! நீர் யானைதான் என்றார்.

பெரியவருக்குக் கோபம் வந்து விட்டது. ஓய்! அதிகமாகப் பேசாதேயும்! மறுமுறை சொன்னால் உம் பல்லை உடைத்து விடுவேன் என்றார்.

***



நண்பர்:—"இப்போது உங்களுக்கும் உங்கள் பக்கத்து வீட்டுக்காரருக்கும் பேச்சு வார்த்தை இல்லைபோலிருக்கிறதே."

கனவான்:—"ஆமாம்."

நண்பர்:—"ஏன்! காரணமென்ன?"

கனவான்:— "ஒருநாள் மாலை நான் கிளப்புக்குப் போகும் சமயத்தில் என் பக்கத்து வீட்டுக்காரர் பிள்ளைகளை அடிப்பதற்கென்று ஒரு பிரம்பைக் கொடுத்தனுப்பினார். நான் அவரது மனைவி இராத்திரி பதினொரு மணிக்குப் பாடத் தொடங்கும் போது அவள்மீது உபயோகிக்கும்படி வேலைக்காரனிடம் திருப்பிக் கொடுத்தனுப்பினேன்."

***

ஒருவன் கடைக்காரனிடம் போய் ஒரு கட்டி மார்கோ சோப் என்ன விலை ஐயா என்று கேட்டார்.

கடைக்காரன்:— மூன்றே காலணா (0-3-3) ஸார்.

ஒருவன்:—ஒரு பெட்டியாக வாங்கினால் என்ன விலை கொடுப்பாய்?

கடைக்காரன்:—பத்தணா (0—10—0) தான் ஸார்.

பாட்டி தன் சிறிய பேரனிடம் தம்பிடி கொடுத்து கடைக்குப் போய் புகையிலை வாங்கிக்கொண்டு வா என்று அனுப்பினுள்.

பேரன் கடைக்காரனிடம் தம்பிடி கொடுத்து புகையிலை வாங்கிக் கொண்டு மீதி சில்லரை கொடு ஐயா என்முன்.

***

வக்கீல் ஒருவர் தேக அசௌகரியத்தினுல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். அவருக்கு டாக்டர் 'மை' நிறமாயுள்ள ஓர் மருந்து கொடுத்திருந்தார். அவருடைய சேவகன் ஒருநாள் அவசரப்பட்டு, மருந்திற்குப் பதிலாக 'மையை'க் கொடுத்துவிட்டான். அவரும் அதைச் சாப்பிட்டு விட்டார். பிறகு சேவகன் தனது தப்பிதத்தை உணர்ந்து வக்கீலிடம் தான் செய்த பிசகைச் சொன்னுன்.

வக்கீல்:—(மறதியாக) இதனுல் என்ன! கொஞ்சம் 'பிளாடிங் பேபரை' எனக்குக் கொடு. அதைத் தின்றுவிட்டால் நான் குடித்த அந்த மையை அது உறுஞ்சிவிடும்.

***



பெஜவாடா வாசியான பழைய கேடியொருவன் பம்பாயில் எப்படியோ எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்டு மாஜிஸ்திரேட்டால் 100 ரூ. அபராதம் விதிக்கப்பட்டான். அப்போது அக் கேடி "கனந்தங்கிய மாஜிஸ்திரேட் அவர்களே! இதே குற்றத்திற்கு எங்கள் ஊரில் 5 ரூபாய் தான் அபராதம் விதித்தார்கள் என்று பணிவாக தெரிவித்துக் கொள்கிறேன்" என்று கூறி வாதித்தான்.

அதற்கு மாஜிஸ்திரேட், "இருக்கலாம்; ஆனுல் உன் ஊரைவிட பம்பாய் 20 மடங்கு பெரிது என்பதை நீ கவனிக்க வேண்டும்" என்முர்.

***

சுப்பு:—அடே கிட்டு, உன்னுடைய மிதி யடியை கொஞ்சம் கொடுடா.

கிட்டு:—என் மிதியடியைக் காணேம். காலில் இருக்கிறதா என்று பார்க்க முகம்பார்க்கும் கண்ணுடிகூட தற்சமயம் இல்லையே.

***

யஜமானன்:— (தச்சனைக் கூப்பிட்டு) "டே! கருப்பண்ணு! என் புது மேஜையின் கால் உடைந்து போய்விட்டது. ரொம்ப விசனமாயிருக்கு. சீக்கிரம் ரிபேர் செய்."

கருப்பண்ணன் ஆசாரி:—"சாமி! கொடிலெ ரிபேர் பண்ணிடரேனுங்க. ஏதோ ஒரு வேலை கிடைச்சிடுத்துனு எனக்கு சந்தோசங்க.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## டப்கூப்பர் ராஜிநாமா

கிரேட் பிரிட்டனின் கோழைத்தனம் எடுத்திருக்கும் மனித சொரூபமே மந்திரி சேம்பர்லேன்! இந்த உண்மை தினந்தினம் ருசுப்பிக்கப்பட்டு வருகிறது. வெளிநாட்டுக் கொள்கையென்கிற ஆயுதத்தைப் பொதிக்திருக்கும் உறை பீதி, எலாமை என்பனவன்றி வேறில்லை. சில நாட்களுக்கு முன் சேம்பர்லேனின் கொள்கையில் கசப்புக் கொண்ட ஈடனும் மற்றொரு உதவி மந்திரியும் ராஜிநாமாச்செய்து ஓடியதை நேயர்கள் அறிவார்கள். இன்று கடற்படைத் தலைவராயிருந்த மந்திரி மிஸ்டர் டப்கூப்பர் ராஜிநாமா கொடுத்துவிட்டார். அந்த ராஜிநாமாவில் வெளிப்படையாகத் தமக்கு முதன் மந்திரியின் போக்கு பிடிக்கவில்லையென்று கூறியிருக்கிறார். இவ்விதமே பார்லிமெண்டு எதிர் கட்சியாரும், லாயிட் ஜியார்ஜ் போன்ற பொறுப்புள்ள விபரல் தலைவர்களும் அடிக்கடி கண்டித்து வருகிறார்கள்; என்றாலும் நாஷனல் கவர்ன்மெண்டு (தற்போதைய ஆளும் கட்சி) ராஜிநாமாச் செய்கிறதில்லை. காரணம் சேம்பர்லேனை ஆதரிக்கும்படியான அவ்வளவு கோழைத்தனம் பிரிட்டினில் பரவி நிற்கிறது என்பதே. எனில் ஹிட்லர் எவ்வாறு தம் காரியத்தை எளிதில் சாதித்துக் கொள்ள மாட்டார்!

---

## காலனிகள் கயா

இத்தகைய சேம்பர்லேன் ஆட்சி இங்கிலாந்தில் நிலைத்திருக்குமானால் பிரிட்டனின் வெளிநாட்டுக் காலனிகள் பல ஹிட்லருக்குப் போய்விடுமென்பதில் ஆட்சேபனையில்லை. ஹிட்லர் ஐரோப்பாவில் யுத்தத்தை எழுப்பி அட்டகாசம் செய்வது ஒருபுறமிருக்க, அடுத்தபடியாக காலனிக்கும் வற்புறுத்துவார் என்பதில் ஐயமில்லை. இரண்டு வாரங்கட்கு முன்பு அவர் நாஜியர் கூட்டத்தில் பேசியபோது "சூடெட்டன் பிரதேசங்கள் கிடைத்துவிட்டால் நாம் ஐரோப்பாவில் வேண்டும் தேசம் வேறெதுவுமில்லை" என்று கூறினார். இதன் கருத்து வெளிநாடுகளில் தேசம் வேண்டுவோம் என்பது தான். இதனைத் தெரிந்திருந்தும் சேம்பர்லேன் தர்கால சாந்தி தேடிக் கொண்டாரென்றால் கோழைத்தனத்திற்கு அளவேது?

---

## பர்மாவில் புதிய போர்

பர்மாவிலே இந்தியர்களுக்கிழைக்கப்படும் தொல்லை இன்னும் தீர்ந்ததாய்த் தெரியவில்லை. அடிக்கடி ஆங்காங்கு திடீர் திடீரென இந்தியர் தாக்கப் படுகின்றனர். அதுகண்டு பொதுஜனங்கள் பயந்துவிட வேண்டாமென போலீஸார் உபதேசம் செய்கின்றார்களாம். உபதேசத்திற்கு என்ன பொருள்? இப்போது மாண்டலே பர்மியர் புதுமாதிரியான போராட்டமொன்றைத் தொடங்கியிருக்கிறார்கள் என்று கேள்விப்படுகிறோம். பர்மியர் பர்மியச் சாமான்களையே வாங்கவேண்டும் என்று கூறுவதுடன் நில்லாமல் இந்தியர் கடைகளில் வாங்கவேண்டாமென மறியல் செய்கிறார்களாம். இம்மறியலைப் பலமாக ஆரம்பித்து நடத்துபவர் பர்மியப் பொங்கிகள். பர்மிய சர்க்கார் எவ்வாறு மேற்படி பிரசாரத்துக்கு சம்மதமளிக்கிறார்களென்று தெரியவில்லை. 'Boycott of British Goods' என்று

சொல்வது துவேஷப் பிரசாரமென்று இந்திய சர்க்கார் எச்சரிக்கை விட்டது பிரிட்டனுக்குத் தெரிந்திருக்கலாம். அந்த நிலைமையில் இந்தியர் கடைகளைப் பகிஷ்கரிக்க நடைபெறும் பிரசாரம் துவேஷத்தனமானது என்று எவ்வாறு சொல்லாமலிருக்க முடியும்? சர்க்கார் செயல் ஒருபால் இருக்க, பர்மியர் இந்தியர்களை ஒழிப்பதற்காகத்தான் கிளர்ச்சி நடத்துகிறார்கள் என்பது வெளியாகி விட்டதன்றோ? இக்கிளர்ச்சி பர்மியர் சுயேச்சையாகச் செய்வதுதானா அல்லது பர்மா—இந்தியா பிரிவினையின் தொடர்ச்சியா? எது உண்மை?

---

## ஆப்ரிக்கா தர்பார்

உயிர் போனாலும் பிறவிக்குணம் போகாது போலிருக்கிறது வெள்ளைக்காரர்கட்கு. சமீபத்தில் தென்னாப்பிரிக்காவில் தகாத-நியாயமற்ற காரியமொன்றைச் செய்திருக்கின்றனர். நியாயமற்றது என நாம் மட்டிலும் கூறிவிடவில்லை. கண்ணியமான ஆங்கிலேயரொருவர்—அதிலும் தென்னாப்பிரிக்காவில் நீண்ட நாளைய அநுபவமுடையவர்—மேலும் மந்திரியாக இருந்து பழக்கம் பெற்றவர்.—தயாள மனப்பான்மையுடையவர் என்று வெள்ளைக்காரர்களாலேயே புகழப்பட்டவர்—அப்படிப்பட்ட ஹாப்மேயரே நியாயமற்றதென்று கூறி யிருக்கிறார். கூறியது மட்டிலுமன்று; தம் துணைவரான மிஸ்டர் ஸ்டாராக்குடன் மந்திரி சபையிலிருந்து நீங்கிக் கொண்டு விட்டார்.

பௌரி என்கின்ற ஒரு ஐரோப்பியர் சென்ற முறை மந்திரியாக விருந்து வேலை பார்த்தார். அவர் பார்த்த பார்வையில் ஜனங்கட்கு 'எது இவர் கண் மூடிக்கொண்டு விட்டால் நல்லது' என்று தோற்றிவிட்டது போலும். ஆகவே சமீபத்தில் நடந்த தேர்தலில் இவரைத் தோற்கடித்து விட்டனர். மிஸ்டர் பௌரி 'பவர்' அற்றவரானார்.—இப்படிப்பட்டவரைத் தேடிப் பிடித்து மந்திரியாக்கினார் தளகர்த்தர் ஹார்ட்ஸாக். இந்த செயல் நியாயமா? ஜனங்கள் வேண்டாமென்று சீட்டுக் கொடுத்தனுப்பிய ஒருவரை வண்டி வைத்தழைத்து மந்திரியாக்குவது மரியாதையா? வீர ஹார்ட்ஸாக் பௌரிக்கு மந்திரி பவர் கொடுத்ததோடு மட்டிலும் விடவில்லை. ஆப்ரிக்க ஐரோப்பியரல்லாதார் பிரதிநிதியாக பார்லிமெண்டில் பேசும்படியும் பௌரிக்கு பதவி கொடுத்திருக்கிறார்! குதிரை கீழே தள்ளியது மல்லாமல், மிதித்ததுடனும் நில்லாமல், மூடிவிட குழியும் தோண்டிய கதை போலல்லவா இருக்கிறது? ஹாப்மேயர்—ஸ்டாராக் கண்டனத்திற்காக அவர்களைப் பாராட்டுவோம்.

---

## தால்சாரில் தறுதலைத் தனம்

தால்சார் என்பது ஒரிஸா பிரதேசத்திலுள்ள ஓர் சிறிய சமஸ்தானம். அங்கு சில காலமாக யுவ பாரதத்தின் விடுதலை முழக்கம் எழுந்திருக்கிறது. இதர சமஸ்தானங்களைப் போல அத் தேச வாசிகளும் மன்னர் யதேச்சாதிகாரத்தை யொழித்து பொறுப்பாட்சி நிறுவி சுகம்பெற விரும்புகின்றனர். அதனால் அவ்வப்போது சிறிது சிறிதாகப் போராட்ட மேற்பட்டதுண்டு. அதைக் கண்ட சர்க்கார், சர். சி. பி., சர். மிர்ஸா இஸ்மாயில் முதலியோரைப் போல் விடுதலைக் கிளர்ச்சியை அடக்கி விடலாமென்று பகீரதப் பிர

யத்தனம் செய்கின்றனர். சென்ற வாரம் ஒரு விசேஷ உத்தரவைப் பிறப்பித்தனர். அதில் 'காந்திஜி பெயரால் அமைதி யின்மையையும் அராஜகத்தையும் தூண்டும் ஸ்தாபனங்களெல்லாம் சட்ட விரோதமானவை" என்று குறிப்பிடப் பட்டுள்ளது. மேலும் "காந்திஜி பெயரால் அமைதியின்மையை வளர்ப்பவர் காந்திஜி பெயருக்கே கேடு சூழ்பவராவர்" என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. அட சமஸ்தான ஒழுங்கே! உனக்கேன் காந்திஜி பெயர் கெடுவது பற்றிக் கவலை? உன் போக்கில் ஆட்சி நடத்த விட்டு விட்டால் காந்திஜி பெயர் கடைத்தேறி விடும் என்பது உன் உத்தேசமோ? ராஜ தந்திரமே? காந்திஜி பெயரைச் சொல்லி நீ எவ்வளவு தந்திரமாய் உயிர் வாழப் பார்க்கிறாய்!

---

## கரியாக வேண்டாம் காசு

ஸ்ரீ. கிருஷ்ணன் ஒரு காலத்தில் நரகாசுரனைக் கொன்றாராம் தீபாவளி தினத்தன்று. அதனைக் கொண்டாவதாகக் கூறும் இந்துக்கள் இந்நாள் (தீபாவளி தினத்தன்று) இந்தியப் பொருளாதாரம் என்ற தெய்வத்தைக் கொல்கின்றார்கள். ஒரு தினத்துக்குள் பல லட்சங்கள் பட்டாசின் பெயரால் வெளியேறும் தினம் தீபாவளி! இந் நாளில் ஏற்படும் அர்த்தமற்ற பொருள் நஷ்டத்தைத் தடைசெய்ய வேண்டுவது பொதுஜன சர்க்காரின் கடமையாகும். பம்பாய் சர்க்கார் இவ் வருட தீபாவளியில் பட்டாசைத் தடை செய்யும் சட்ட மொன்ற இயற்றப் போகிறார்களாம். அதனை இதர மாகாணங்களும் பின் பற்றுதல் (காசு கரியாகாமல் பார்த்துக் கொள்ளுதல்) அவசியமாகும்.

---

## அழுந்தமுறும் ஜப்பான்

சர்வதேச சங்க மெனும் கிழவி மானங்கெட்டு மதிமயங்கி போன திசை யெல்லார்க்கும் பொல்லாளாகி விட்டாலும் ஏதோ சிற்சிலவற்றைச் செய்யப் போவதாய்ச் சொல்லிக் கொள்கிறாள். இவ் வாரம் நடைபெற்ற சங்கக் கூட்டத்தில் சீனாவின் பிரதிநிதியாகிய ஸ்ரீ. கூ. ஜப்பான் புரியும் அநீதக் கோரக் கொடுஞ் செயலைக் கூறியதன் மேல் சங்கம் ஜப்பான் மீது நிர்ப்பந்த முறைகளைக் கையாடுவ தென்று தீர்மானித்தது. இனி ஜப்பானோடு வியாபார சம்பந்தத்தை யொழித்தல், ஆயுத சப்ளை மறுத்தல், எண்ணெய் முதலியவற்றைக் கொடாதிருத்தல் முதலியவற்றைச் சங்கத்தைச் சேர்ந்த நாடுகள் கைக்கொள்ளும். இந்த தீர்மானம் எவ்வளவு தூரம் அமல் நடக்கு மென்பதை உலக மறியுமாயினும், ஓரளவுக்காவது இது வெற்றி பெற்றால் ஜப்பான் திணறி ஒடுங்கி விடுமென்பதில் ஆட்சேபணையில்லை.

---

## மந்திரி சபையும் பார்லிமெண்டும்

தேசிய காங்கிரசின் மந்திரிசபையாகிய காரியக்கமிட்டியும், பார்லிமெண்டாகிய காங்கிரஸ் கமிட்டியும் பரபரப்பான பல சம்பவங்களிடையே 26-ந்தேதியன்று வெற்றிகரமாக முடிவுற்றன. வழக்கம்போல் காங்கிரஸ் கமிட்டியில், அதிதீவிர—மிதவாத காங்கிரஸ் கட்சிகள் இரண்டும் ஒன்றோடொன்று முட்டி மோதி ஆர்ப்பரித்தாலும், காரியக்கமிட்டியில் நிறைவேறிய தீர்மானங்கள் யாவும் அப்படியே ஒப்புக்கொள்ளப்பட்டன.

டாக்டர் பட்டாபி, புலாபாய் தேசாய், சர்தார் படேல், ராஜன்பாபு ஆகியோர் திணறத் திணற பேசவேண்டிய தாயிற்று. அவர்கட்கிருந்த ஆதரவால் அதிதீவிரவாதிகள் காங்கிரசில் இன்னும் குறிப்பிடத் தகுந்த செல்வாக்கைப் பெறவில்லை என்று வெளிப்பட்டது. பல விடங்களில் காரியக் கமிட்டி அபேதவாதத்திற்கு முரணாக மூண்டெழுமென்பது விளங்கியது.

## டாக்டர் கரே விஷயம்

டாக்டர் கரே விஷயம் காரியக்கமிட்டியைப் பெரிதும் கவர்ந்தது. நீளமாக யோசித்தும் கரே குற்றவாளி என்பதை மறுக்க முடியவில்லை. ஆகவே சென்ற கூட்டத்தின் முடிவே இப்பொழுதும் முடிவாயிற்று.

## சமஸ்தானங்கள்

கரேக்குப் பின் காரியக்கமிட்டியின் கவனத்தை ஈர்த்த ஒரு பிரச்னை சுதேச சமஸ்தான அடக்கு முறைகளாகும். காஷ்மீரம், ஹைதராபாத், திருவாங்கூர் முதலிய சமஸ்தானங்கள் கையாண்டு வரும் இரும்பு முறைகளைக் கண்டித்து, மக்களின் நியாயமான உரிமைகளைப் பாதுகாக்க வேண்டுமென கா. க. வற்புறுத்தியது. விசேஷமாக திருவாங்கூர் துப்பிரயோகம் பற்றி விசாரணை போர்டு நியமிக்க வேண்டுமென்றும், கைதிகளை விடுதலை செய்ய வேண்டுமென்றும் தீர்மானித்தது.

## யுத்தம் பற்றிய தீர்மானங்கள்

அடுத்தபடியாக காரியக்கமிட்டியை அதிகம் உலப்பிய பிரச்னை யுத்தம் பற்றியது. உலக யுத்தம் ஏற்பட்டால் காங்கிரஸ் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதுபற்றி கடுமையாக விவாதிக்கப்பட்டது. இறுதியில் காந்திஜி யோசனையோடு ஹரிபுரா தீர்மானத்தை உறுதி செய்தார்கள். அன்றியும் யுத்த நெருக்கடி யேற்படும் காலத்தில் சமயத்துக் கொத்தவாறு நடவடிக்கை எடுத்துக்கொள்ளு முரிமையை எ. ஐ. சி. சி. காரியக்கமிட்டியிடம் ஒப்படைத்துவிட வேண்டுமென்பது முடிவாயிற்று.

## வெளியேற்றம்

இத்தகைய சில தீர்மானங்கள் காங்கிரஸ் கமிட்டியில் விவாதிக்கப்பட்டு நிறைவேறினும் வருந்தத் தகுந்த ஒரு விஷயம் சோஷலிஸ்டுகள் வெளியேறியதாகும். "சில காங்கிரஸ்காரர்கள் பிரஜா வுரிமையின் பெயரால் கொலை கொள்ளை முதலிய பலாத்கார முறைகளைப் பரப்பி வருகிறார்கள்; வகுப்புப் போராட்டத்தையும் கிளப்பி வருகிறார்கள். இவை பிரஜா வுரிமை யல்லவென்று காங்கிரஸ் எச்சரிக்கை செய்கிறது" என்று ஒரு தீர்மானம் (அ. இ. கா. கமிட்டியில்) விவாதத்திற்கு வந்தபோது அதன் உண்மைப் பொருளை தெரிந்துகொண்ட அபேதவாதிகள் எதிர்த்தனர். இது வீணாக காங்கிரஸ்காரர்களை C.I.D. கட்குக் காட்டிக் கொடுப்பதாகுமென்று பலர் முழங்கினர். தோழர் எம். என். ராய் போன்றார் கடுமையாக வாதாடிய பின்னர் காங்கிரசைவிட்டு தன்னைப் போன்றார் வெளியேறி விடக்கூடும் என்றும் எச்சரித்தார். எனினும் காரியக்கமிட்டி அங்கத்தினர் விடவில்லை. அவர்களுடைய செல்வாக்கினால் தீர்மானத்தை நிறைவேற்றினர். இந்நிறைவேற்றம் காங்கிரஸில் மிகக் கடுமையான ஓர் நிலைமையை உண்டு பண்ணி யிருக்கிறதென்று அழுத்தமாகக் கூற விரும்புகிறோம்.

தொடர் கதை.

# மாயா விரோதி

ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.



## (இரண்டாம் பாகம்)

ஜெமீந்தார் முகம் வெளுத்து இருந்ததைக் கண்டு, இந்திரா அவரை யடைந்து, "என்ன, உடம்பு சரியாக இல்லையா?" என்று கேட்டாள்.

அப்பொழுது டாக்டர் ஸ்ரீகண்டனும் அவருடைய மனைவியும் பிரபுவை யடைந்தனர். டாக்டர் ஸ்ரீகண்டன் ஜெமீந்தார் கீழே விழாதபடி பார்த்துக் கொள்ளலானார்.

"ஏதோ தலை கிறுகிறுவென்று சுழன்றது. இப்பொழுது சரியாகப் போய்விட்டது," என்று மாயாவிரோதி சொல்லிக்கொண்டே, தைரியத்தை வருவித்துக் கொண்டான்.

இந்திரா தன் நாயகன் பொருட்டு விசனித்தாள். "சில காலமாகவே என் புருஷருக்கு உடம்பு சரியாக இல்லை. டாக்டர் சார், நீங்கள் இவருக்கு தக்க மருந்து கொடுத்து, இவரை குணப்படுத்த வேண்டும்," என்று கேட்டாள்.

மாயா விரோதி தன்னைச் சரிப்படுத்திக்கொண்டு, அன்போடு மனைவியை நோக்கி, "எனக்கு உடம்பு ஒன்றுமில்லை; என் உடம்பைப் பரிசீலனை செய்ய உங்களைப் போஜனத்திற்கு ஜெமீந்தாரிணி அழைக்கவில்லை. நான் இன்று காலையில் சரியாக உணவு எடுத்துக் கொள்ளவில்லை. அதனால்தான் மயக்கம் வரும்போல் இருந்தது. இப்பொழுது எனக்கு அதிக பசி ஏற்பட்டிருக்கிறது. நீங்களும், உமது மனைவியும் பசியோடு இருப்பீர்கள் என்று நான் நினைக்கிறேன். நாம் போஜனம் செய்யப்போகலாம்," என்று சொன்னான்.

மேனாட்டு ஆசாரப்படி மாயாவிரோதி சீமாட்டியை அழைத்துக் கொண்டு போனான். இந்திரா டாக்டரோடு நடந்து, போஜன ஹாலை யடைந்தாள்.

மாயாவிரோதி டாக்டருடைய மனைவி சீமாட்டியைத் தனது வலது புறம் உட்காருமாறு செய்து கொண்டான். அவளைப் பார்த்துப் பேச தைரியம் கொண்டிருந்தான். சாப்பிடுகையில், அந்த ஸ்திரீ உலகம் முழுவதும் பிரயாணம் செய்த விஷயத்தைத் தெரிந்து கொண்டான். ஆனால்

அவள் யார் என்பதை மாயாவிரோதி முதலில் தானாகவே தெரிந்து கொண்டிருந்ததால், சீமாட்டி நாஜூக்காகப் பேசுவதைக்கேட்டு ஆச்சரிய மடைந்தான்.

"ஜலதூதன்" கப்பலில் அவள் ஒரு கைதியாக இருந்தபொழுது அவள் தன்னைக் காதலித்ததை மாயாவிரோதி நினைத்துக்கொண்டான். தான் அவள்பால் காதல் கொள்ளாததையும் நினைத்தான். அவள் எப்படி கனக னோடு சேர்ந்து தன்னைக் குழியில் தள்ள முற்பட்டாள் எனும் எண்ணத் தையும் கொண்டு, "இவளும் கனகனும் ஏதோ சூழ்ச்சி செய்கிறார்கள்," எனக் கருதினான்.

அவர்கள்மேல் மிகக் கோபங்கொண்டான். ஆயினும் சீமாட்டியைத் தந்திரமாகத் தனது கைக்குள் போட்டுக் கொள்வதானால், அவள் வாயி லாக கனகனுடைய ரகசியத்தை அறிய முடியும் என்று கருதி, அவளுடன் ஸ்நேக பாவமாக இருக்க முடிவு செய்தான்.

நான்கு பேர்களும் சாப்பிட்டுக் கையைத் துடைத்துக் கொண்டதும், பிரபு மாயா விரோதியிடம் சிக்கிய விஷயத்தைப்பற்றிப் பேச்சு எழுந்தது. டாக்டர் ஸ்ரீகண்டன் கூட சிறிது சிரத்தை காண்பித்தார். "மாயா விரோதி மிகவுங் கொடியன்; அவன் இறந்துவிட்டான் என்று நீங்கள் எண் ணுகிறீர்களா?" என்று கேட்டார்.

"நீங்கள் தினசரிகளில் இதைப்பற்றிப் படிக்கவில்லையா?" என்று மாயாவிரோதி கேட்டான்.

"துப்பறியும் போலீஸ் அதிகாரி ஷிம்ஹளநாதர் சந்தேகப்படுகிறார். மாயாவிரோதி இன்னும் உயிருடன் இருப்பதாகவே சொல்லுகிறார். அவன் ஒரு பிரபுவைப்போல் வேஷம் தாங்கி வசித்தாலும் வசிக்கலாகும் என்பது என்னுடைய எண்ணம்" என்று டாக்டர் ஸ்ரீகண்டன் சொன்னார்.

அதைக் கேட்டதும் மாயாவிரோதியின் முகம் வெளுத்தது. இருந் தாலும் அதைப் பொருட்படுத்தாமல், "உங்களுடைய யோசனையே யோசனை," என்று சிறிது சிரித்துக்கொண்டே சொன்னான்.

போஜனம் முடிந்ததும் இந்திராவும் ஸ்ரீகண்டனும் மாளிகையை யடுத்திருந்த தோட்டத்தினுள் சென்று இயற்கை காட்சியின் மேன்மை யைக் கண்ணுற்று அதைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். அப்பொழுது மாயாவிரோதியும் சீமாட்டியும் தனிமையில் இருக்க நேர்ந்தது.

"அன்பரே, நான் உம்மை இப்பொழுதும் நேசிக்கிறேன். கனகனை நான் நேசிக்கவில்லை," என்று டாக்டர் ஸ்ரீகண்டனுடைய மனைவி சீமாட்டி கூறினாள்.

"நீ இங்கே கனகனோடு ஏன் வசிக்கிறாய்?" என்று மாயா விரோதி கேட்டான்.

"உம்மைக் காப்பாற்றும் பொருட்டே நான் கனகனோடு இருக்கிறேன்."

"டாக்டர் ஸ்ரீகண்டன் என்று பொய்ப்பெயர் ஏன் வைத்துக் கொண் டிருக்கிறான்?"

"தன்னை யாரும் தெரிந்துகொள்ளக் கூடாதென்றுதான் கனகனும் விநாயகமூர்த்தியும் சேர்ந்து உங்களை ஒரு படுகுழியில் தள்ளிவிட சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்."

"நானும் அப்படித்தான் நினைத்தேன், சண்டாளர்கள்!"

"நீங்கள் நான் சொல்கிறபடி நடந்தால் ஒன்றும் கெட்டுப் போகாது. என்ன சொல்கிறீர், பிரபுவே?"

மாயாவிரோதிக்கு சீமாட்டியின் குணநிசயங்களைப்பற்றித் தெரியும். அவள் ஒரு கொலைகாரியாக இருந்தாலும் தன்னைப் பொறுத்த மட்டில் ஆபத்து உண்டாக்கமாட்டாள் என்று மாயாவிரோதி பழைய எண்ண மொன்றை ஞாபகப்படுத்திக் கொண்டான். ஆதலின் அவளோடு பிரிய மாக இருப்பதாக நடந்துகொள்ள வேண்டும் என்று முடிவு செய்தான்.

"பிரபுவே, கனகன் உங்களை அவமானப்படுத்த பெரிய சதி செய் துள்ளான். உங்களைப்பற்றி ஒரு கதை யெழுதி யுள்ளான். உயிலையும் எழுதி வைத்திருக்கிறான். அதில் உங்களது ரகசியத்தை வெளியிட்டிருக் கிறான். எல்லாவற்றையும் அரக்குமுத்திரை போட்ட கவரில் வைத்திருக் கிறான். அவன் இறந்த மறுநாள் அதை உடைத்தால் ரகசியம் வெளியாகு மாம்."

"கனகன் இறந்து விட்டதாக வல்லவோ நான் நினைத்திருந்தேன் முன்பு? எப்படியோ வேஷம் போட்டுக்கொண்டு, உன்னைக் குழியில் தள் ளப்பார்க்கிறான்! பணம் வேண்டுமானால் இப்படியா செய்ய யோசிக்க வேண்டும்? என்னுடைய கதி என்னாகும்? ஐயோ! நான் எத்தகைய பாதா ளக்குழியில் தள்ளப்படுவேன்!"

"நீங்கள் அஞ்சவேண்டாம், பிரபுவே; நான் ஆபத்து வராமல் பார்த் துக் கொள்ளுகிறேன். நீங்கள் என்னைக் காதலிக்கிறீர்களா?—பிரபுவே, நீங்கள் என்னை மட்டும் நேசிப்பதாக ஒரு வார்த்தை சொல்லுங்கள், போதும். ஆபத்து வராமல் நான் பார்த்துக் கொள்ளுகிறேன். கனகனை நாம் கொன்று விடுவோம்........நீங்கள் என்னை நேசிக்கிறீர்களா?"

மாயாவிரோதி என்ன பதில் கொடுப்பது என்று தயங்கினான். தன் னுடைய எழில் மிக்க கோதை இந்திராவின் முன் சீமாட்டி ஒரு மின்மினிப் பூச்சிபோல இருப்பதை அறிந்தான். எதற்கும் காரியத்தைச் சாதிக்க வேண்டும்; ஆதலின் சிரித்துக்கொண்டே அவளுடைய கரத்தை யெடுத்து முத்தமிட்டான். "நீ எதற்கும் எனக்கு நன்றாக யோசிக்க சிறிது அவகாசம் கொடுக்கவேண்டும்," என்று போலி அன்போடு கேட்டுக் கொண்டான். அவள் மனம் குளிர்ந்தது; முகம் மலர்ந்தது.

"சந்தோஷம் பிரபுவே, விநாயகமூர்த்தியிடம் கனகனுடைய உயில் இருக்கிறது. அவன் அதைத் தன் ஹோட்டலில் முதல் மாடியில் பெரிய ஹாலில் கருங்காலிமர மேஜையினுள் பூட்டி வைத்திருக்கிறான், தெரிந்து கொண்டீர்களா? பிரபுவே, நான் உங்களை மறுமுறையும் வேறு எங்கே யாவது சந்திக்கவேண்டும்."

அப்படி அவள் சொல்லிக் கொண்டிருக்கையில் டாக்டர் ஸ்ரீ கண்டன் இந்திராவோடு பேசியவண்ணம் அங்கே வந்து, பிரபுவிடமும் ஜெமீந்தாரினியிடமும் செலவு பெற்றுக் கொண்டு, தமது மனைவியோடு சென்றார்.

அவர்கள் போனதும் மாயாவிரோதி கொண்ட மனக்கிலேசமும் கோபமும் சொல்லத் தரமன்று. நல்லவேளையாக இந்திரா தனது குழந்தைகளிடம் சென்றிருந்தாள். செங்கோட்டை ஜெமீந்தார் எப்படியாவது கனகனையும் விநாயக மூர்த்தியையும் ஒழித்து விட வேண்டும்; கனகன் தம்மைப் பற்றி யெழுதிய கடிதங்களைப் பெற்றுப் பொசுக்கி விடவேண்டும் என்று முடிவு செய்தார். அப்படிச் செய்யாதவரையில் தாம் சுகமாக இருக்க முடியாது; தாம் படுகுழியில் தள்ளப் படுவதன்றி, தமது அருமை மனைவி இந்திரா தேவிக்கு பெருத்த அவமானமும் விசனமும் உண்டாகும் என்று கருதியதால் அச் சண்டாளர்களை ஒழிக்காத வரையில் தமக்குப் பேராபத்து என்று அறிந்தார். தெய்வாதீனமாக சீமாட்டி தமக்கு உதவி புரிவாள் என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டார்.

---

## அதிகாரம்—8.

### நள்ளிரவில் நடந்த விபரீதங்கள்

இரவு புயல்காற்றோடு கட்டு கொண்டிருந்தமையால் ஒரு நாய் கூட வீதியில் போகாது; மழையும் பெருங் காற்றும் பெருத்த அமளியைச் செய்து யாவருடைய மனதிலும் அச்சத்தைக் கொடுக்கும் நிலையில் இருந்தது. வங்காள விரிகுடாவும் 'கடபுடா' என்று ஆக்ரோஷத்தோடு சப்தம் செய்த வண்ணம் புயலில் திண்டாடிக் கொண்டிருந்தது என்று சொல்லுமாறு இருந்தது. ஒரே இருள். பூனைக்குக்கூட கண் தெரியாது என்று சொல்லலாம் போல் இருந்தது.

இரவு இரண்டு மணி இருக்கும். அத்தகைய நள்ளிரவில் இரண்டு மனிதர் காற்றையும் மழையையும் இருளையும் சட்டை செய்யாமல் கிண்டியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தனர். என்ன தைரியம்!

"ஐயோ! என்ன பயங்கரமான இரவு! என்ன புயல்காற்று, நண்பா!" என்று குளிரில் நடுங்கிய வகையில் மாயாவிரோதி தனது நண்பன் சௌடியிடம் சொன்னான்.

"நீர் ஏன் பயம் கொள்ள வேண்டும்? நாம் செய்யப் போகும் காரியத்திற்கு இந்த இரவும் புயலும் மிகவும் நன்மையைத்தான் கொடுக்கும்," என்றான் சௌடி.

"ஆம். ஆனால் இந்தக் குளிர் எப்படியும் நம்மை பாதிக்கும்," என்றான் மாயா விரோதி.

"ஜெமீந்தாரினி உங்களைப் பார்த்துக் கொள்ளுவார்கள்."

"அன்புள்ள இந்திரா! அவள், நான் மாளிகையில் தூங்குவதாக நினைத்துக் கொண்டிருப்பாள் அல்லவா."

"ஆம். அவள் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். நம்மோடு வரமுடியுமா, பிரபுவே."

"என்ன கொடிய காற்று! நம்மை அலாக்காகத் தூக்கி விடும்போல் இருக்கிறதே! நீ குதூகலத்தோடு இருக்கிறாய், சௌடி."

"இந்த சமயத்தில் துப்பறியும் சிங்கம் என்று சொல்லிக் கொள்ளும் ஸிம்ஹனாதர் தமக்கு உள்ள தைரியத்தைக் கொண்டு, இங்கு வரட்டும், பார்க்கலாம். நாம் நமது காரியத்தைச் சாதித்து விட்டுச் சென்றால் எவ்வளவு சந்தோஷத்தோடு இருக்கலாம்."

"நாம் எங்கேயாவது சிறிது தங்கிச் செல்லலாமா, சௌடி?"

"அது கூடாது".

"ஐயோ! எனக்கு இந்தக் காற்றில் மூச்சு விடுவது கூட கஷ்டமாக இருக்கிறது," என்று மாயாவிரோதி சொன்னான்.

"பிரபு, நாம் இதைவிடக் கடுமையான இரவுகளைக் கண்டதில்லையா? நீங்கள் அதை மறந்து விட்டீர்களே!" என்று செடப்பன் தைரிய வார்த்தை புகன்றான்.

"அப்பா, உன்னுடைய தைரியத்தை நான் மெச்சுகிறேன், சௌடி தான் உன்னுடைய தைரியத்தையும் குதூகலத்தையும் பெற வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன். நாம் இப்பொழுது சாதாரணமான மனிதர் போல் மாறுவேஷம் போட்டுக் கொண்டிருக்கிறோம். இந்திரா என்னை இந்த உடையில் தெரிந்து கொள்ள முடியுமா?" என்று மாயா விரோதி கூறினான்.

"என்னுடைய காதலியும் என்னை இந்த உடையில் தெரிந்து கொள்ள மாட்டாள்."

"நீ எல்லா சாமான்களையும் கொண்டு வந்திருக்கிறாயா?"

"எல்லாம் கள்ளச் சாவிகள், சுத்தி, அரம் முதலாயின. எல்லாம் இந்தப் பையினுள் உள; விளக்கு கூட."

இருவரும் விநாயக மூர்த்தியின் ஹோட்டலை சிறிது தூரத்தில் கண்டனர். அந்த ஹோட்டல் இரண்டு மெத்தை வீடு ஆகக் கட்டப்பட்டிருந்தது.—முதல் மாடிக்குக் கீழ் உள்ள அறைகளின் ஜன்னல்கள் மூடப்பட்டிருந்தன. விளக்கு வெளிச்சம் இல்லை. அதே மாதிரி இரண்டு மாடி அறைகளிலும் பிரகாசம் காணப்படவில்லை. ஹோட்டல் முழுவதும் தூங்குவதுபோல் மாயாவிரோதிக்கும் சௌடப்பனுக்கும் தோன்றியது.

அந்த ஹோட்டலை யடைந்ததும் அவர்கள் அதனுள் செல்வதற்கு இருந்த வழிகளைச் சிறிது ஆராய்ந்தனர். சௌடப்பனுக்கு அதன் விஷயம் முன்பே தெரியும். ஹோட்டலுக்கு முன்பு ஒரு முற்றம் போல் காணப்பட்ட இடம்; அதனுள் போய்த்தான் ஹோட்டலை அடைய முடியும். அந்த முற்றத்தினுள் போவதற்கு வழி இருந்தது. அது இப்பொழுது மூடப்பட்டிருந்தது. அதைத் திறப்பதற்கு சௌடியிடம் சாவி இருந்தது. முன்பு அவன் தனது காதலியைச் சந்திக்கச் சென்றபொழுது அவள் அதன் சாவி யொன்றை அவனிடம் கொடுத்திருந்தாள்.

"பிரபுவே, எனது காதலியின் சாவி இப்பொழுது இக் கதவைத் திறந்து உள்ளே போக எவ்வளவு உபயோகமாக இருக்கிறது," என்றான் சௌடி.

"நாம் நமது காரியத்தைப் பார்ப்போம். என்னை பிரபு என்று அழையாதே. என் பெயரையும் சொல்லக் கூடாது. நான் முன்பே சொல்லியிருக்கிறேன்," என்று மிகவும் மெதுவாக மாயாவிரோதி சொன்னான்.

"ஆகட்டும், ஐயா"

"ஹோட்டலில் முதல் மாடியில் ஒரே ஒரு அறை தானா?"

"ஆம். ஒரே ஒரு பெரிய ஹால். அறை என்று கூடச் சொல்லலாம். தவறில்லை."

"நாம் சேவகர் செல்லும் கதவு வழியாக இந்த முற்றத்தினுள் சென்றால், அந்த ஹாலுக்குப் போவது எளிதாக இருக்கும். ஆனால் போக முடியாதா?"

"முடியாது. அந்தக் கதவு அருகில் ஒரு சிறு அறை உண்டு. அங்கே யாராவது தூங்குவார்கள். மேலும் அதை உடைத்துக் கொண்டு போனால் நாம் வந்த காரியம் கை கூடாது. நாம் இந்த வாயிலாகச் சென்று, முதல் மாடிக்கு ஏணி வழியாகச் சென்று விடலாம்."

"ஏணி இருக்கிறதா?"

"ஹோட்டலில் ஏணி வைக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது மாடியில் விநாயக மூர்த்தி தூங்குவதை நான் அறிவேன். இதை ஒரு ஹோட்டல் சமையல்காரன் மூலியமாக நேற்று தான் அறிந்தேன்."

"சௌடி, இப்பொழுது மணி மூன்று. நாம் அரைமணி நேரத்தில் நமது காரியத்தை முடித்துக்கொண்டு, திரும்பிச் சென்று விடவேண்டும். நாம் சீமாட்டி சொன்னபடி "ஆரோக்கிய விலாஸ்" வீட்டிற்குப் போக வேண்டும். கனகன் புதிதாக மற்றொரு உயில் எழுதி வைக்காமல் இருப்பதைச் செய்ய வேண்டும்."

சிறிது நேரத்தினுள் அவர்கள் முற்றத்தினுள் சென்றனர். அங்கு இருந்த ஏணியை சௌடப்பன் முதன் மாடி ஜன்னலுக்குச் சரியாகப் பொருத்தினான்.

மாயாவிரோதி முதலில் ஏறினான். இரண்டாவதாக சௌடப்பன் ஆயுதங்களோடு பின் தொடர்ந்தான்.

மாடியின் ஜன்னலை அடைந்ததும் மாயாவிரோதி ஒரு ஆயுதத்தினால் சாளரக் கண்ணாடிகள் சிலவற்றைச் சப்தம் செய்யாமல் வெட்டி, அவற்றைச் சௌடப்பனிடம் கொடுத்தான். பின்பு மெதுவாக உட்பக்கம் இருந்த கொக்கிகளை எடுத்து, கதவைத் திறந்தான்.

இருவரும் மாடியினுள் சென்றனர். மாயாவிரோதி அந்த ஹாலில் இருந்த ஒரு சாய்வு நாற்காலியில், மார்பு துடிக்க உட்கார்ந்து கொண்டு ஹாலை இருட்டு தீபத்தால் பார்த்தார். இருட்டு தீபம் எங்கு வெளிச்சம் வேண்டுமோ அங்கு திருப்பப்பட்டால் வெளிச்சம் கொடுக்கும். கருங்காலி மரத்தால் செய்யப்பட்ட ஒரு மேஜை அங்கு இருப்பதை அவர்கள் கண்டு சந்தோஷமடைந்தனர்.

அந்த மேஜைக்குச் சில பூட்டுகள் போடப்பட்டிருந்தன. அவற்றைத்

திறந்தால் தான் உள்ளே இருக்கும் பெரிய "டிராயர்" திறக்க முடியும்: அதனுள் இருக்கும் கனகனுடைய உயிர் அவர்களுக்கு கிடைக்கும். மாயா விரோதியும் சௌடியும் பல சாவிகளைப் போட்டு ஒரு பூட்டைத் தவிர வேறு பூட்டுகளைத் திறந்துவிட்டனர். ஆனால் அந்த ஒரு பூட்டு மட்டும் சுலப சாத்தியமாக வருவதாக இல்லை. அதனோடு நமது நண்பர்கள் சப்தம் செய்யாமல் போராடினார்கள். அது திறக்கப்படுவது கடினமான காரியமாகக் காணப்பட்டது. என்ன செய்வார்கள்?

மாயாவிரோதி அரத்தை வைத்துக் கொண்டு அதனுடைய "பாட்லாக்"கைக் கழற்றிவிடக் கடைசியில் நினைத்து அதன்படியே செய்தான். அப்பொழுது மேஜை சிறிது நகர்ந்ததால் கொஞ்சம் க்ரீச் என்று சப்தம் உண்டாயிற்று. அதைக் கேட்டு இருவரும் பயமடைந்தனர்.

அப்பொழுது சிறிது தூரத்தில் யாரோ வருந்தி மூச்சுவிடுவது போன்ற சப்தத்தைக் கேட்டனர். மாயாவிரோதியும் சௌடியும் பயந்து போயினர். ஆனால் மறுபடியும் தைரியத்தோடு வேலை செய்யத் துவக்கினர்.

"யாரோ தூங்காமல் இருப்பதாகத் தெரிகிறது, சௌடி. நாம் ஜாக்கிரதையாக வேலை செய்யவேண்டும்" என்று மிகவும் மெதுவாக முதலைய செட்டி கூறினான்.

"சரி, நாம் எப்படியாவது இந்தப் "பாட்லாக்"கைக் கழற்றிவிட வேண்டும்." என்றான் சௌடி.

சிறிது நேரம் மாயாவிரோதி அதனோடு போராடினான். கடைசியில் அது கழன்றுவிட்டது. ஆனால் அது எடுக்கப்படுகையில் கைதவறிக் கீழே விழுந்தது. சிறிது சப்தம் அதனால் ஏற்பட்டது.

அதே சமயத்தில் யாரோ கஷ்டப்பட்டு மூச்சுவிடும் சப்தம் அல்லது அழுகை அவர்களுக்குக் கேட்டது. மறுபடியும் அவர்களுக்கு சிறிது பயம் உண்டாயிற்று.

"அதென்ன சப்தம்?" என்றான் சௌடி.

"இதைப் பற்றி நாம் யோசிக்க நேரம் இல்லை, நமது காரியத்தைச் செய்வோம். நாம் சீக்கிரம் வெளியேற வேண்டும்" என்றான் மாயா விரோதி.

மேஜையின் "டிராயரை" மாயாவிரோதி திறந்தான். அதனுள் ஒரு பெரிய அட்டை இருந்தது. அந்த அட்டையின் மேல் ஒரு காகிதம்; அதில் சிலவார்த்தைகள் எழுதப்பட்டிருந்தன. அந்த அட்டை "டிராய"ருள் நின்றவகையில் திறப்பவர்களுக்கு நல்வரவு கூறுவதுபோல் இருந்தது. மாயாவிரோதியும் சௌடியும் விளக்கின் உதவியால் அதைப் படித்தனர். அது வருமாறு:—

"செங்கோட்டை ஜெமீந்தாருக்கு விநாயகமூர்த்தி தனது வணக்கத்தை அன்போடு செலுத்தி, நல்வரவு சொல்லுகிறான்."

தடித்த எழுத்துக்களில் அந்த நல்வரவு தனக்காக விநாயகமூர்த்தியால் எழுதப்பட்டதைக் கண்ட மாயாவிரோதி கோபமும் திகைப்பும் கொண்டு, கல்லாய்ச் சமைந்து நின்றான். சௌடப்பனுக்கும் அத்தகைய உணர்ச்சி இருந்தது. (தொடரும்.)

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

வெகுதான்யஹூ ஐப்பசிமீ—கலியுகாதி 5040, சாலிவாகனம் 1861,
பசலி 1348, கொல்லமாண்டு 1114, ஹிஜாரா 1357,
இங்கிலீஷ் 1938ஹூ அக்டோபர்மீ—நவம்பர்மீ

| ஐப்பசிமீ | அக்டோபர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | திங் | நவ43-55 | பூச34-43 | சித்60 | விஷு—புண்ணியகாலம் |
| 2 | 18 | செவ் | தச38-38 | ஆயி31-13 | சித்60 | நவக்கிரகசாந்தி செய்ய |
| 3 | 19 | புதன் | ஏகா33-35 | மக27-58 | சி27-58அ | சர்வ, மத்வ ஏகாதசி |
| 4 | 20 | வியா | துவா29-3 | பூர25-8 | சி25-8அ | கோவட்ச துவாதசி |
| 5 | 21 | வெள் | திர25-10 | உத்22-55 | சி22-55ம | தனதிரயோதஸ,நரக சதுர் தசி ஸ்நானம் (இரவில்) |
| 6 | 22 | சனி | சது22-15 | அஸ்21-45 | மர60 | தீபாவளி பண்டிகை |
| 7 | 23 | ஞா | ●20-20 | சித்21-33 | சித்60 | சர்வத்திர அமாவாசை, கேதார கௌரி விரதம் |
| 8 | 24 | திங் | பிர20-0 | சுவா22-45 | அ22-45ம | கார்த்தீக சுத்தம் |
| 9 | 25 | செவ் | துதி21-3 | விசா25-23 | ம25-23சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 10 | 26 | புத | திரி23-33 | அநு29-23 | சித்60 | ஆலோசன கௌரி விரதம் |
| 11 | 27 | வியா | சது27-28 | கே34-43 | பி34-43சி | மாச சதுர்த்தி விரதம் |
| 12 | 28 | வெள் | பஞ்32-35 | மூல41-10 | அ41ர10பி | விவாகம், பும்சவனம் |
| 13 | 29 | சனி | சஷ்38-30 | பூரா48-28 | சித்60 | சஷ்டி, கந்தர் சஷ்டி, சூர சம்ஹாரம் |
| 14 | 30 | ஞா | சப்144-43 | உத்55-48 | அமி60 | |
| 15 | 31 | திங் | அஷ்50-38 | திரு60 | அமி60 | |
| 16 | 1 | செவ் | நவ55-53 | திரு2-48 | சித்60 | |
| 17 | 2 | புதன் | தச59-43 | அவி8-55 | பிர8-55சி | |
| 18 | 3 | வியா | ஏகா60 | சத13-45 | ம13-45சி | |
| 19 | 4 | வெள் | ஏகா1-55 | பூர17-0 | சித்60 | |
| 20 | 5 | சனி | து22-28 | உத்18-33 | சி18-33ம | |
| 21 | 6 | ஞா | திர-1-13 சது58-30 | ரே18-28 | அ18-28சி | |
| 22 | 7 | திங் | ப○54-18 | அஸ்17-0 | சித்60 | |
| 23 | 8 | செவ் | பிர49-5 | ப❋14-13 | சித்60 | கிருத்திகை [துவிதியா |
| 24 | 9 | புத | துதி43-5 | கிரு10-30 | அ10-30சி | கார்த்திக சாதுர்மாஸ்ய |
| 25 | 10 | வியா | திரி36-40 | ரோ6-8 | மர60 | சந்திரோதய மாச விரதம் |
| 26 | 11 | வெ | சது30-5 | மிரு1-23 திரு56-35 | சித்60 | சங்காஷ்ட சதுர்த்தி, வியா தியஸ்தர் குளிக்க |
| 27 | 12 | சனி | பஞ்23-35 | புன52-5 | சித்60 | யாத்திரை செய்ய |
| 28 | 13 | ஞா | சஷ்17-23 | பூச47-53 | சித்60 | விவாகம், சர்வ முகூர்த்தம் |
| 29 | 14 | திங் | சப்11-43 | ஆயி44ர20 | சி44-20ம | கிருஷ்ணாஷ்டமி |
| 30 | 15 | செவ் | அ6-45 | மக41-43 | சித்60 | கடைமுழுக்கு ஸ்நானம் |

(Rows 16–30 of the second column: 1938ஹூ நவம்பர்மீ)

| | | | |
|---|---|---|---|
| சனி | கே | | |
| குரு | 17-விரு-புத<br>19-கும்-குரு | | |
| | சுக் | சூ-பு ராகு | செ |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

## ஜாதகாமிருத பலவிமர்சம் என்னும்

# சோதிட கணிதாமிருத சாகரம்.

*கற்கக் கசடற கற்றவை கற்றபின்*
*நிற்க அதற்குத் தக.*

என்ற மூதுரை வாக்கியப்படி எவ்விதக் கல்வியாயினும் குற்றமறக் கற்றுத் தெளிவதே நம்மோர் கடமையாகும். அதுபற்றியே வேத புருஷனுடைய அங்கங்கள் ஆறினுள் நேத்திர அங்கமாகிய, சோதிட சாஸ்திரமானது நம்மவர் எளிதிலறியும் வண்ணம் ஆரம்பசோதிடர் முதல் பஞ்சாங்க கணித ஆராய்ச்சிவரையில் துர்பிக்ஷகாலமுண்டாகும் விபரம், சர்வதேச அக்ஷாம்சம் செய்யும் முறை, சாஸ்திர உபயாதிகள். வர்கோத்தமம். தசவர்க்கம் பிரிக்குமடைவு வக்கிர. ரிஜு அஸ்தமயமறிதல். துவாதசாம்ச சக்கிர நிர்ணயம், உச்சாதி கிரகசங்கியை, கேந்திர திரிகோணதிஸ்தானங்கள், பார்வைஸ்தான பலம், திரிகரண சங்கிரமறியும் விதம், மற்றும் ஜாதக கணிதத்திற்காய்வேண்டிய லக்னஸ்புடம்—நக்ஷத்திரஸ்புடம், பாவகஸ்புடம், கிரகங்களில் ஆட்சி, உச்சநட்பு நீச்சம்பகை முதலியபலம்; மண்டல சமயசார பருவம், மனோவளர்ந்து ஆயம் சொல்லும் மார்க்கம்; ஆரூடபாவம், விஷயத்தை யறிந்தபிறகு முடியும் முடியாதெனக் கூறும் வகை; காலசக்கிரம், அஷ்டக வர்க்கம், கோசாரம்; லக்னபாவம்; சகோதரபாவம்; மாதுருபாவம்; புத்திரபாவம்; ரோக பாவம்; களத்திரபாவம்; ஆயுள்பாவம்; பிதுர் பாவம்; தொழில், லாபம், விரய முதலியவைகளும்; ருதுகால பலாபலன்களை விளக்கும் மார்க்கமும் பலன் முதலியவைகளையும் செவ்வனே விளக்கி சோதிட வித்வசிகாமணிகளின் வேண்டுகோளால், சாஸ்திர சம்பந்தமான குதர்க்க வார்த்தைகளை யவருடன் சாஸ்திரசம்பந்தமான உண்மையைத் தெள்ளிய நடையினுலெடுத்துக் காட்டும் புராதன கணிதசாஸ்திர மூலமாய் ஒவ்வோர் விஷயங்களுக்கும் சந்தேக நிவர்த்தியாக, போதுமான காரணங்களுடன் எடுத்துக்காட்டி, ஜாதகாமிருதபலவிமர்சம் என்னும் ஜாதககணிதசாகரம் என்னும் புதுப்பெயர் சூட்டி உலக பரோபகாரமாக குறைந்தவிலையில் தயார் செய்திருக்கிறோம். இந்நூலிலேயுள்ள விஷயங்கள் பெரும்பாலும் சாஸ்திர சம்பந்த சந்தேகங்கள் நிவர்த்தி செய்யவும் உள்ளபடி உண்மைப் பலன் சொல்லவும் ஏதுவாகும். சோதிடர்கள் பொதுவாய் ஜனன கால லக்ஷணங்களை சந்தேகமின்றி எடுத்துச்காட்டவும் யோகாவயோகங்களும் அவையுண்டாகுங் காலங்களும் தமிழ் வாசிக்கத் தெரிந்தவர் இப்புத்தகத்தைக் கொண்டே கணிதம் செய்யத்தக்க எளியநடையிலெழுதியுள்ளதாகையால் இப்புத்தகத்தைக் கையாள்வோர் பெரிதும் பயன்படுவாரென்பதற்கு சிறிதேனுமையமில்லை.

## இப்புத்தகத்தி லடங்கிய விஷயங்கள்.

இதன் விலை ரூபா 1—8—0

# ஸ்திரீ புருஷ ஜாதகத் திறவுகோல்

ஜோதிடரை விரும்பாமலே ஒவ்வொருவரும் தாம் தாமே ஜாதககணிதம் பண்ணவும், 9 கிரகங்களை 12 இராசிகளில் அடைத்து ஆட்சி யுச்சம் இவைகளைக் கண்டு பலாபலன் சொல்லவும், இராசியில் 7 கிரகங்கள் ஒன்றாகக் கூடியிருப்பினும், இரண்டு மூன்று கிரகங்கள் சேர்ந்திருப்பினும் வேறு விதமாய் மாறி மாறியிருப்பினும் அவைகட்கு அனுபவமாகப் பலன் தெரிந்து சொல்லவும் இதனால் தெரிந்துகொள்ளலாம். இதன் விலை அணா 8.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

காதலருக்கு இன்பந்தரும் நூதன நூல்

அன்பர்கள் ஆவலுடன் எதிர்பார்த்த ஆனந்த சாஸ்திரம்

வெளியாயிற்று!

# இன்பவாழ்க்கையின் இரகசியங்கள்

## (நான்காம் பதிப்பு)

அழகிய சீமை கலிகோ பைண்டு செய்யப்பட்டு கண்ணைக் கவரத்தக்க அநேக ஆப்டோன் படங்களுடன்



400-பக்கங்களுக்குமேல் அழகிய பெதர்வெய்ட் பேபரில் சுத்தமான எழுத்தில் அச்சிடப்பட்டுள்ளது.

## இதன் விலை ரூபா 2.

ஆனந்தபோதினி சந்தாதாரர்களுக்கு விலை ரூபா 1—8—0

இது காதலர்க்கு இன்பந்தரும் நூதன நூல்; போகானந்தத்தை விரும்பும் பூமான்கள் ஆவலுடன் எதிர்பார்த்திருந்த ஆனந்த இரகசிய சாஸ்திரம்.

இது காதல் இன்பத்தை உள்ளவாறுணர்ந்து அநுபவித்து, இல்வாழ்க்கையை நல்வாழ்க்கையாக நடத்திப் போகானந்தக் கடலில் மூழ்கி சற்சந்ததிகளைப் பெற்று, மறுமைப் பயனையும் அடைதற் கேதுவாயிருக்கும்படி பற்பல நுண்மையான மார்க்கங்கள் நிறைந்த இந்நூல் இப்போது இனிய தமிழ்நடையில் வெளிவரப்பெற்றிருக்கிறது. இதில் நமது பூர்வீக கொக்கோக சாஸ்திரத்தின்சாரம்

# துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பெற்ற எமது சொந்த பிரசுரப் பாடசாலை புத்தகங்கள்.

## பாடப் புத்தகங்களின் விவரம்.

| | | அ. | பை. |
|---|---|---|---|
| 1-ம் வகுப்பு மாணவர் தமிழ் பாலபாடம் | (1-ம் புத்தகம்) | 2 | 6 |
| 2-ம் வகுப்பு மாணவர் தமிழ் வாசகம் | (2-ம் புத்தகம்) | 3 | 0 |
| 3-ம் வகுப்பு ௸ | (3-ம் புத்தகம்) | 4 | 0 |
| 4-ம் வகுப்பு ௸ | (4-ம் புத்தகம்) | 5 | 0 |
| 5-ம் வகுப்பு ௸ | (5-ம் புத்தகம்) | 6 | 0 |
| 6-ம் வகுப்பு ௸ | (6-ம் புத்தகம்) | 7 | 0 |
| 7-ம் வகுப்பு ௸ | (7-ம் புத்தகம்) | 8 | 0 |
| 5-ம் வகுப்பு இளைஞர் இந்திய சரித்திரக் கதைகள் | | 4 | 0 |
| 5-ம் வகுப்பு இலக்கிய இலகு போதம் | | 3 | 0 |
| சிறுவர் துரைத்தன முறைகள் | (1-ம் பாகம்) | 5 | 0 |
| சிறுவர் துரைத்தன முறைகள் | (2-ம் பாகம்) | 6 | 0 |

---

| | | | |
|---|---|---|---|
| செய்யுட்பாடத்திரட்டு | | 4 | 0 |

## உப பாடமாக வைப்பதற்குரிய புத்தகங்கள்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| சதானந்தர் | 1 | 4 |
| ஜீவகன் | 1 | 0 |
| கர்ணன் சரிதை | 0 | 12 |
| ஸ்ரீ பீஷ்மவிஜயம் | 0 | 10 |
| வீரத்தன்மையுள்ள ஹிந்து மாதா சிரோமணிகள் | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் | 0 | 8 |
| அரிச்சந்திரன் சரிதை | 0 | 8 |
| சகோதர வாஞ்சை | 0 | 7 |
| நீலக்கொடி | 0 | 5 |
| மணவாளன் | 0 | 3 |
| பரசுராமன் | 0 | 3 |
| ஸ்ரீ கிருஷ்ணன் தூது | 0 | 8 |
| தசாவதார மகிமை | 0 | 6 |
| சிசுபாலன் | 0 | 8 |
| சண்டோபாக்கியானம் | 0 | 6 |
| அங்கதன் | 0 | 4 |
| மங்களேசுவரன் | 0 | 6 |
| சத்திய வசனன் | 0 | 4 |
| சாலு மந்திரி கதை | 0 | 4 |
| விமலன் or விதியின் வெற்றி | 0 | 4 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| சங்ககாலத்துப் புலவர்கள் அல்லது பண்டைத் தமிழ்ப் புலவர் மாண்பு | 0 | 10 |
| கண்ணபிரான் | 0 | 4 |
| உதயணன் | 0 | 6 |
| ஸ்ரீ பாலன் | 0 | 8 |
| தசக்கிரீவன் | 0 | 14 |
| போஜ சரித்திரம் | 0 | 5 |
| லார்ட் கிளைவ் | 0 | 12 |
| மூப்பெருந்தாசர் | 0 | 10 |
| சீமந்தனி | 0 | 8 |
| தக்கன் | 0 | 6 |
| ரிப்பன் பிரபு | 0 | 10 |
| மாதர் நீதிமஞ்சரி | 0 | 6 |
| பாரத வீரர்கள் | 0 | 8 |
| நான்கு கோடி அல்லது நான்கு கடமைகள் | 0 | 4 |
| நரிவிருத்தம் மூலமும் உரையும் | 0 | 4 |
| கண்ணகி | 0 | 10 |
| விஜயதிவிட்டர் | 0 | 12 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |

---

**ஆனந்தபோதினி ஆபீஸ்,**

**தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.**

# துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பெற்ற எமது சொந்த பிரசுரப் பாடசாலைப் புத்தகங்கள்.



## பாடப் புத்தகங்களின் விவரம்.

*சென்னை பச்சையப்பன் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் ஆ. வீ. கன்னைய நாயுடு அவர்கள் எழுதியவை.*

| | | | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1-ம் வகுப்பு மாணவர் தமிழ் பாலபாடம் | | (1-ம் புத்தகம்) | 2 | 6 |
| 2-ம் வகுப்பு மாணவர் தமிழ் வாசகம் | | (2-ம் புத்தகம்) | 3 | 0 |
| 3-ம் வகுப்பு | ௸ | (3-ம் புத்தகம்) | 4 | 0 |
| 4-ம் வகுப்பு | ௸ | (4-ம் புத்தகம்) | 5 | 0 |



செய்யுட்பாடத்திரட்டு 4 0

## ஊப பாடமாக வைப்பதற்குரிய புத்தகங்கள்

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| சிப்பன் பிரபு ... | 0 | 10 | 0 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 | 0 |
| சண்டோபாக்கியானம் ... | 0 | 6 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 | 0 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 | 0 |
| உதயணன் ... | 0 | 8 | 0 |
| குசேலோபாக்யான வசனம் | 1 | 0 | 0 |
| நரிவிருத்தம் மூலமும் உரையும் ... | 0 | 4 | 0 |
| கம்பராமாயண வசன சங்கிரகம் ... | 2 | 0 | 0 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 | 0 |
| சங்ககாலத்துப் புலவர்கள் அல்லது தமிழ்ப்புலவர்கள் மாண்பு ... | 0 | 12 | 0 |
| அங்கதன் ... | 0 | 4 | 0 |
| நான்கு கோடி அல்லது நான்கு கடமைகள் ... | 0 | 4 | 0 |
| தசாவதார மகிமை ... | 0 | 6 | 0 |
| கண்ணபிரான் ... | 0 | 4 | 0 |
| விமலன் ... | 0 | 4 | 0 |
| தொல்சி தோயின் இரு சிறு கதைகள் ... | 0 | 8 | 0 |
| சத்தியவசனி ... | 0 | 4 | 0 |
| சிசுபாலன் ... | 0 | 8 | 0 |
| கிருஷ்ணன் தூது ... | 0 | 8 | 0 |
| விசயதிவிட்டர் ... | 0 | 12 | 0 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 7 | 0 |
| நாலு மந்திரி கதை ... | 0 | 4 | 0 |
| பரசுராமன் ... | 0 | 3 | 0 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 | 0 |
| பீஷ்ம விஜயம் .... | 0 | 10 | 0 |
| வீரத்தன்மையுள்ள ஹிந்து மாதர் சிரோமணிகள் ... | 0 | 10 | 0 |
| நீலக்கொடி ... | 0 | 5 | 0 |
| மணவாளன் ... | 0 | 3 | 0 |
| சதானந்தர் ... | 1 | 4 | 0 |
| கருணாகரரும் சத்திய சீலரும் ... | 0 | 8 | 0 |
| தக்கன் ... | 0 | 6 | 0 |
| மங்களேசுவரன் என்னும் பத்திராயு ... | 0 | 8 | 0 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 | 0 |
| கண்ணகி ... | 0 | 10 | 0 |
| மாதர் நீதிமஞ்சரி ... | 0 | 6 | 0 |
| மூப்பெரும்தாசர் ... | 0 | 10 | 0 |
| லார்ட் கிளைவ் ... | 0 | 12 | 0 |

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

## ஸ்ரீமதி வை. மு. கோதைநாயகி அம்மாள் எழுதிய நாவல்கள்.

| | | | |
|---|---|---|---|
| வைதேகி (2-பாகங்கள்) | 2–8–0 | சண்பக விஜயம் | 1–12—0 |
| பத்மசுந்தரன் (2-பாகங்கள்) | 2–8–0 | கௌரீ முகுந்தன் | 1–12—0 |
| ராதாமணி (2-பாகங்கள்) | 2–8–0 | சுகந்த புஷ்பம் | 1—0—0 |
| சாருலோசனா (2-பாகங்கள்) | 2–8–0 | கோபால ரத்னம் | 0–14—0 |
| நவநீத கிருஷ்ணன் | 2–0–0 | வீரவஸந்தா | 0—8—0 |
| ருக்மிணீகாந்தன் | 2–0–0 | மாதவமணி | 0—3—0 |

## வடுவூர் K. துரைசாமி ஐயங்கார் நாவல்கள்.

| | பாகங்கள் | ரூ. அ. | | ரூ. அ. |
|---|---|---|---|---|
| பூரண சந்திரோதயம் | 4 | 7—8 | காளிங்கராயன் கோட்டை 2 பாகங்கள் | 4—0 |
| மதனகல்யாணி | 3 | 4—8 | விலாசவதி 2 பாகங்கள் | 3—0 |
| சௌந்தரகோகிலம் | 3 | 6—0 | பாலாமணி | 2—8 |
| திகம்பரசாமியார் | 2 | 3—0 | வஸந்தமல்லிகா | 1—8 |
| ,, பால்யலீலை | 2 | 5—0 | வித்தியாசாகரம் | 1—4 |
| மாயாவினோதப்பரதேசி | 2 | 5—0 | திவான்லொடபடசிங் | 0–12 |
| மேனகா | 2 | 3—0 | திலோத்தமா | 0–12 |
| கனகாம்புஜம் | 2 | 2–12 | மாணிக்கவாசகர் | 0—8 |
| மாயசுந்தரி | | 0–12 | மங்கையர்பகட்டு | 0–12 |

விலாசம்:- ஆரியன் புக் டிபோ,

19, தாண்டவராய முதலி தெரு, திருவல்லிக்கேணி, மதராஸ்.

---

# ரோல்டு கோல்டு "பிடோ" லீவர் கைகெடியாரம்.

எங்கள் ரிஜிஸ்டர் ரோல்டு கோல்டு "பிடோ" லீவர் கைக்கெடியாரம் பார்வைக்கு அழகாயிருக்கும். சரியான டைம் காட்டும். சிலிண்டர் கெடியாரங்களைப்போல் கொஞ்ச நாளைக்குள் நின்று போவதல்ல. 5 வருஷமல்ல பத்து வருஷங் கூட ரிபேர் இல்லாமல் போகக்கூடிய கடியாரம். இதை வாங்குவோருக்கு ரோல்டு கோல்டு கெடியார கைச்சங்கிலி இனாமாகச் சேர்த்து அனுப்பப்படும். வாங்கிக்கொண்ட ஒரு வாரம் வரை சரியாக ஓடவில்லை யென்றால் வாபஸ் ஒப்புக்கொள்ளப்படும். 5 வருஷ காரண்டியுடன் அனுப்புகிறோம்.



இனாம் சங்கிலியுடன் கடியாரம் விலை ரூ. 5-12-0. ஸ்டாக் கொஞ்சம் உடனே எழுதுங்கள்.

---

**சுபீரியர் வாட்சு கம்பெனி, கெடியார வியாபாரிகள், மதராஸ்.**

# எமது சொந்தப் பிரசுரங்கள்.

**இரத்தினபுரி இரகசியம் 6 பாகம்** **11 10 0**

இதில் மிக்க ஆச்சரியமுள்ளனவும், நெஞ்சு திடுக்கிடக்கூடியவையும், ஆதி முதல் அந்தம் வரையில் மனதைக் கவரக்கூடியவைகளுமான சம்பவங்கள் நிறைந்துள்ளன. பலவித நடவடிக்கைகளையுடைய பாத்திரங்களுமிருப்பதால், அநேக நீதிகளும், புத்திமதிகளும் தக்க திருட்டாந்த பூர்வகமாக நிரூபிக்கப்படுகின்றன.

**ஞானசெல்வம்பாள் (5-பாகங்கள்)** **9 10 0**

நம்மிடம் இதுவரை வெளியாகியிருக்கும் அநேகம் நாவல்களில் இதுதான் மிகப் பெரியது. "இரும்பைக் காந்தம் இழுக்கின்றவாறுபோல்" படிப்போர் மனத்தை இழுத்துக்கொள்ளத் தக்கது. கதை மிகப் பெரியதாயினும், வாசகர்களின் மனம் சிறிதும் அயர்ச்சியடையாமல் மேலும் ஆனந்தமாக முடிவுவரை யிருக்கும். சில பெண்கள் தங்களுக்கு மேலதிகாரிகளின்றித் தங்கள் இஷ்டம்போல் எங்கு முலவிச் சகல ஆடவர்களுடன் பழகிக்கொண்டிருப்பதால் நேரும் துன்பங்கள் இத்தன்மையன வென்பது நன்குவிளங்கும்.

| | | | |
|---|---|---|---|
| நான்கு பாகம் வரை ஒவ்வொன்றுக்கு விலை ரூபா | 2 | 0 | 0 |
| ஐந்தாவது பாகம் மாத்திரம் ,, ,, | 1 | 10 | 0 |
| ஆனந்தபோதினிச் சந்தாதாரர்களுக்கு ஐந்து பாகமும் சேர்ந்து வாங்கினால் ,, ,, | 8 | 0 | 0 |

**அமராவதி 2 பாகம்** **4 0 0**

இது மிக்க பிரமையை யுண்டாக்கும் அற்புத சம்பவங்கள் நிறைந்த நாவல். ஒரு மனிதன் சுய நம்பிக்கையையும், நேர்மையான நடக்கையும், ஊக்கமுமுடையவனுயிருந்தால் அவன் தான் கோரிய காரியத்தில் கட்டாயம் ஜெயம் பெறுவான் என்பதும், எத்தகைய ஆபத்துக்களிலும் தப்பித்துக் கொண்டு கீர்த்தியும் மேலான பதவியும் அடைவானென்பதும் இதில் நன்குய் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அசம்பாவிதமெனத் தோன்றும் அநேக சம்பவங்கள் இதில் உண்மையாகவே நடைபெறுவது வாசிப்போர்க்கு அளவற்ற மனமகிழ்ச்சியையளிக்கும்.

**அற்புதமர்மங்கள் அல்லது**
**ஆனந்தஸிங்கின் அஷ்டஜெயங்கள்** **1 12 0**

இது, மகா அற்புத மர்மங்களடங்கிய துப்பறியும் நாவல். இதில் எட்டு விசித்திரமான கதைகள் அடங்கியிருக்கின்றன. எந்த நாட்டி... ...ப்... ...பூகமுடையவர்களாலும், எவ்வித காரண... ...முடியாத அதியாச்சரியமா... ...ஆனந்த...

நந்திதேவர் திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்திரீ புருஷ ஜாதகத் திறவுகோல்

சோதிடரை விரும்பாமலே ஒவ்வொருவரும் தாம் தாமே ஜாதக கணிதம் பண்ணவும், 9-கிரகங்களை 12-இராசியில் அடைத்து ஆட்சி யுச்சம் இவைகளைக் கண்டு பலாபலன் சொல்லவும், இராசியில் 1,2,3,4,5,6,7-கிரகங்கள் ஒன்றாகக் கூடியிருப்பினும், இரண்டு மூன்று கிரகங்கள் சேர்ந்திருப்பினும் வேறுவிதமாக மாறி யிருப்பினும் அவைகட்கு அனுபவமாகப் பலன் தெரிந்து கொள்ளலாம். இதன் விலை அணா 8.

"ஜாதக சிரோன்மணி" என்னும்

# "பிருஹத் ஜாதகம்"

இது தமிழில் சுலபமான வசன நடையில் எழுதப்பட்டது. இதில் விசேஷ வியாக்கியானங்களும் கஷ்டமான விடங்களில் உதாரணங்களும், வாசகியங்களும் கொடுக்கப்பட் டிருக்கின்றன. ஆயுர்தாயாத்தியாயமாகிய ஏழாவது அத்தியாயம் மிகவும் தெளிவாக உதாரணங்களுடன் சொல்லப்பட் டிருக்கின்றது. ஆயுளை, சுலபமாக கிரகங்களின் வலுவை அநுசரித்து நிர்ணயிக்கும் விதி பிரத்தியேகமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இராஜயோக, கிரகயோக, நாபசயோக முதலிய யோக அத்தியாயங்கள் தெளிவாக சொல்லப்பட்டிருக்கின்றன. இதில் இதர கிரந்தங்களி லிருந்து விஷயங்கள் எடுத்துத் தேவையான விடத்தில் சேர்க்கப்பட் டிருக்கின்றன. இது, "ஆனந்தபோதினி" சுத்த திருக்கணித பஞ்சாங்க கணிதரும், ஜாதக கணிதம் என்ற புத்தகத்தின் ஆசிரியருமான C. G. இராஜன், B. A. அவர்களால் எழுதப்பட்டது கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டது. இதன் விலை ரூபா 2. வி. பி. தபால் செலவு வேறு.

"ஜாதக கணிதம்" என்னும்

# சோதிட கிரக சட்பலம் ஆயுள் கணிதம்

இதில் சப்த வர்க்கம், கிரக சட்பலம், கிரகங்களின் வலுவின் தாரதம்மியம், பாவச் சக்கிரம், துவாதசபாவ பலம், உச்ச பலம், திக்குப் பலம், பட்ச பலம், கிரகயுத்த பலம், ஹோரா பலம், அயன பலம் முதலிய 24-வித பலங்கள், ஆயுள் இவைகளை வெகு சுலபமாக கணிக்க அநேக வாக்கியங்களும் ... ங்களும் கொடுக்கப்பட் டிருக்கின்றன. கிரகங்களின் ... றிவதற்கும் ஆயுள் கணிதத்தில் அ... ...ர்ம பத்ததி, கேசவ ... றிவ